# வான வீதி

## பாகம் - 1

ஆசிரியர் :

P. பாலகிருஷ்ணன்

("பாலு")

வெளியீடு :

"பேசும் படம்" காரியாலயம்

ராயப்பேட்டை : : சென்னை 14

# முன்னுரை

தமிழ் சினிமா நக்ஷத்திரங்களின் வாழ்க்கை வரலாறுகள் அடங்கிய "நக்ஷத்திர மாலை" இரண்டு பாகங்களின் தொடர்ச்சியாக இந்த "வான வீதி" வெளியிடப்பட்டிருக்கிறது. முதலிரண்டு நக்ஷத்திர மாலைகளிலும் இடம்பெறாத நக்ஷத்திரங்களின் வாழ்க்கை வரலாறுகள் இந்த "வான வீதி"யில் அடங்கி உள்ளன.

தமிழ்ப்பட ரஸிகர்களின் தேவையைப் பூர்த்தி செய்வ தொன்றே எங்களது லட்சியம். தமிழ் சினிமா வானில் சமீப காலத்தில் சுடர்விடத் தொடங்கியிருக்கும் நக்ஷத்திரங்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிய வேண்டுமென்ற ரஸிகர்களின் ஆவலை "வான வீதி" பாகம்-1 பூர்த்தி செய்கிறது.

தமிழ் ரஸிகர்கள் முதலிரண்டு நக்ஷத்திர மாலைகளுக்கும் அளித்த வரவேற்பை "வான வீதி"க்கும் அளிப்பார்கள் என்று நம்புகிறோம்.

இந்தப் புத்தகத்தை வெளியிட எங்களுடன் ஒத்துழைத்த நக்ஷத்திர மணிகளுக்கு எங்களது நன்றி.

சென்னை,
7 ஜூன், 1948.

"பேசும் படம்" காரியாலயம்

# பொருளடக்கம்

# பானுமதி

மாதம் ஆயிரத்தி ஐநூறு ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்த ஒரு நாரீமணி மாதம் அறுபது ரூபாய் சம்பளத்தில் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஒரு வாலிபனைக் காதலிக்கிறாள். வாலிபனும் அவளைக் காதலிக்கிறான். அதே சமயத்தில் இதுவும் சாத்தியமா என்ற பிரமிப்பும் அவனுக்கு உண்டாகிறது. கடைசியில் தனது காதல் சமாசாரத்தை தனது பெற்றோர்களிடம் வெளியிடுகிறாள் அந்தப் பெண்மணி. பெற்றோர்களுக்குக் கோபம்தான் உண்டாகிறது. "போயும் போயும் இந்த தரித்திர நாராயணன்தானா உனக்கு அகப்பட்டான்!" என்று சீறுகிறார்கள். ஆனால் அவள் கலங்கவில்லை. விடாப்பிடியாக பெற்றோர்களையும் உதாசீனம் செய்து அந்த ஏழை வாலிபனையே மணம் செய்து கொள்கிறாள். அதுமட்டுமல்ல; அவனுடன் சந்தோஷமயமான வாழ்க்கையையும் நடத்திவருகிறாள்.

நம்பமுடியாத இந்த காதல்கதை வேறு யாருடைய கதையுமல்ல. இன்று சினிமாவானில் முன்னணி நக்ஷத்திரமாக ஜ்வலிக்கும் ஆந்திர நடிகை பானுமதியின் காதல் பூத்துக் காய்த்துப் பழுத்த கதையின் சுருக்கம்தான் இது!

பானுமதி ஆந்திர தேசத்தில் குண்டூர் ஜில்லாவிலுள்ள ஒங்கோலில் 1924-ம் வருஷம் பிறந்தார். ஆந்திர வைஷ்ணவ பிராமண ஜாதியைச் சேர்ந்தவர். அவரது தகப்பனார் ஒங்கோல் ஜில்லா முனிசீப் கோர்ட்டில் ஒரு கிளார்க்காக வேலை பார்த்து வந்தார்.

பானுமதியின் தகப்பனாருக்கு சங்கீதத்தில் நல்ல ஞானமும் தேர்ச்சியும் உண்டு. பானுமதி சின்னஞ்சிறு சிறுமியாயிருந்த பொழுதே தகப்பனார் அவருக்குப் பாட்டுக் கற்றுக்கொடுக்க ஆரம்பித்தார். ஒங்கோல் ஹைஸ்கூலில் படிப்பு; மாலை நேரங்களில் வீட்டில் சங்கீதப் பயிற்சி—இப்படியாகக் கழிந்தது பானுமதியின் குமரிப்பருவம்.

பானுமதியின் சங்கீத ஞானமும், இனிய குரலும் விரைவில் பிரசித்தியடைந்தன. இவற்றைப்பற்றிக் கேள்விப்பட்ட

டைரக்டர் வி. புல்லையா ஓங்கோலுக்குவந்து தாம் டைரக்ட் செய்துகொண்டிருந்த "வர விக்ரயம்" தெலுங்குப்படத்தில் ஒரு முக்கியமான பாகத்திற்கு பானுமதியை ஒப்பந்தம் செய்து கொண்டார். அப்பொழுது பானுமதி நான்காவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்தார். சினிமாவில் நடிக்க சான்ஸ் கிடைக்கவே படிப்புக்குத் தலை முழுகிவிட்டு "வரவிக்ரய"த்தில் நடிப்பதற்காகக் கல்கத்தா சென்றார்.

"வரவிக்ரயம்" நல்ல வெற்றியடைந்தது. அதில் பானுமதியின் சிறந்த நடிப்பும் ரசிகர்களின் கவனத்தைக் கவர்ந்தது. ஆகவே டைரக்டர் வி. புல்லையா தமது அடுத்த படமாகிய "மாலதி மாதவ"த்திலும் பானுமதிக்கு இடம்கொடுத்தார். இந்தப்படக்கதை ஜனரஞ்சகமாக இல்லாதபடியால் இந்தப் படம் அவ்வளவு வெற்றி பெறவில்லை. இருந்தாலும் பானுமதியைப் பொறுத்தவரையில் தமது பாகத்தை நன்றாக நடித்து நல்ல பெயர் வாங்கிக்கொண்டு விட்டார்.

"மாலதி மாதவ"த்திற்குப் பிறகு டைரக்டர் பி. புல்லையா டைரக்ட் செய்த "தர்மபத்னி"யில் பானுமதி நடித்தார். இந்தப் படமும் நல்ல வெற்றியைப் பெற்றது. பானுமதியின் புகழும் இதன் மூலம் ஊர்ஜிதமாயிற்று. அதன் பின்னர் ஹரிபாய் தேசாய் டைரக்ட் செய்த "பக்தி மாலா"வில் பானுமதி நடித்தார். இந்தப்படம் சுமாரான வெற்றியைப் பெற்றது. அதன் பின்னர் "கிருஷ்ண பிரேமா," "கருட கர்வபங்கம்" ஆகிய இரு தெலுங்குப் படங்களிலும் நடித்தார். இவ்விருபடங்களும் வெற்றிகரமாக முடிந்தன.

"கிருஷ்ண பிரேமா"வில் நடித்ததை பானுமதி ஒரு நாளும் மறக்க முடியாது. ஏனெனில் அவரது வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிக்கு "கிருஷ்ண பிரேமா"வில்தான் விதை போடப்பட்டது. அந்தப்படத்தின் டைரக்டருக்கு உதவியாளராக ஸ்ரீ ராமகிருஷ்ணா என்ற இளைஞர் வேலைபார்த்து வந்தார். பானுமதியின் கடாக்ஷத்திற்காக எத்தனையோ படே படே ஆசாமிகள் எல்லாம் காத்திருக்க பானுமதியின் கடாக்ஷம் இந்த இளைஞர் மீது விழுந்தது. ராமகிருஷ்ணாவைக் காதலித்தார் பானுமதி. ராமருஷ்ணாவும் பானுமதியைக் காதலித்தார். ஆனால் "இதெல்லாம் வெறும் கனவு; இதுவும் உண்மையாயிருக்க முடியுமா?" என்றெல்லாம் ஆச்சரியப்பட்டாராம் அவர்.

இந்தக் காதல் என்பது எவ்வளவு விசித்திரமான வஸ்து பார்த்தீர்களா? நக்ஷத்திரப் பதவியில் பிரகாசித்துக் கொண்டிருந்த பானுமதிக்கு ஒரு சாதாரண வாலிபன்மீது காதல் ஏற்படுவானேன்? இதற்கெல்லாம் நாம் எப்படிக் காரணம் கூற முடியும்? அதுதான் "காதல் ஒரு தேவ ரகஸ்யம்" என்று நமது பெரியோர்கள் கூறிச் சென்றார்களோ!

பானுமதி—ராமகிருஷ்ணா காதல் வளர்ந்து கொண்டே வந்தது. அதே சமயத்தில் தமது பெற்றோர்களிடம் இதைப் பற்றி எப்படிச் சொல்வது என்று தயங்கிக் கொண்டே வந்தார் பானுமதி. கடைசியில் "கருடகர்வ பங்க"த்தில் நடித்து முடித்த பிற்பாடு தமது பெற்றோர்களிடம் ராமகிருஷ்ணாவைத் தாம் காதலிப்பதைத் தெரிவித்து தங்களது விவாகத்திற்கு அனுமதி கோரினர்.

தங்களுக்கு மாப்பிள்ளையாக வரப்போகும் வாலிபன் யார், அவனது சம்பளம் என்ன, சொத்து சுதந்திரம் என்ன, முதலிய எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்துகொண்ட பெற்றோர்கள் பானுமதியின் விவாகத்திற்கு அனுமதிதரக் கண்டிப்பாய் மறுத்து விட்டார்கள். அப்பொழுது ஒரு நூறு ரூபாய்கூட முழுதாக ராமகிருஷ்ணாவிடம் கிடையாதாம். "போயும் போயும் இந்த ஆண்டிதானா உனக்குக் கிடைத்தான்? அந்தப் பஞ்சையை விவாகம் செய்து கொள்ளும் எண்ணத்தையே விட்டுவிடு," என்று உபதேசிக்க ஆரம்பித்தார்கள் பெற்றோர்கள்!

இது எதிர்பார்க்கப்பட வேண்டியதுதானே! ஏன், ஆண்டியெனப்பட்ட பரமசிவனை உமாதேவி மணக்க விரும்பியபோது உமையின் பெற்றோர்கள் என்ன செய்தார்கள் தெரியாதா? "எத்தைக்கண்டு நீ இச்சை கொண்டாயடி மகளே!" என்று கேலி செய்தார்கள். சிவபெருமானின் மாட்டுவாகனத்தையும், புலித்தோலையும், பழங்கந்தையையும் ஏளனமாகப் பேசினார்கள்! அப்படியிருக்க பானுமதியின் பெற்றோர்கள் அவர் ராமகிருஷ்ணாவை விவாகம் செய்துகொள்ள அனுமதிகொடுக்காததில் என்ன ஆச்சரியம் இருக்கிறது?

ஆனால் பானுமதி பிடிவாத குணமுடையவர். நல்லது என்று தமக்குப் படுவதை விடாப்பிடியாகச் செய்து முடிக்கும்

குணம் அவரிடம் இயற்கையாகவே உண்டு. அதிலும் காதல் விஷயத்தில் விட்டுக் கொடுத்து விடுவாரா? பெற்றோர்கள் பேச்சையும் உதாசீனம் செய்து 1943-ம் வருஷத்தில் ஸ்ரீ ராம கிருஷ்ணவையே ஹிந்துமத சம்பிரதாயப்படி விவாகம் செய்து கொண்டார். இதற்கு எவ்வளவு தைரியம் வேண்டும் என்று நீங்களே ஊகித்துக்கொள்ளலாம்.

விவாகமானபின்னர் பானுமதி வி. நாகய்யாவுடன் "ஸ்வர்க்க ஸீமா"வில் தோன்றி நடித்தார். பி. என். ரெட்டி டைரக்ட் செய்த படமிது. 'ஸ்வர்க்க ஸீமா'வில் நடித்துக் கொண்டிருக்கும் பொழுதே ஒய். வி. ராவ் டைரக்ட் செய்த "தாசில்தார்" தெலுங்குப் படத்திலும் பானுமதி நடித்தார். "ஸ்வர்க்க ஸீமா"வும் சரி, "தாசில்தா"ரும் சரி, பிரமாதமான வெற்றியைப்பெற்றன. பானுமதியை முன்னணி நக்ஷத்திரமாக மாற்றிய படங்கள் இவ்விரு படங்களுமே எனலாம். 'ஸ்வர்க்க ஸீமா'வில் அவர் பாடிய "பாவுரமா" என்ற பாட்டு அவருக்கு மட்டற்ற புகழை வாரிக்கொடுத்தது.

"தாசில்தா"ரில் நடித்த பிற்பாடு சுமார் ஆறுமாதங்கள் பானுமதி எந்தப்படத்திலும் நடிக்காது ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அவர் ஒரு குழந்தைக்குத் தாயாகும் தறுவாயிலிருந்த சமயம் அது. அப்பொழுதுதான் முருகன் டாக்கி பில்ம் கம்பெனியார் தங்களது தமிழ் "ரத்னகுமா"ரில் நடிக்க பானுமதியை ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். பானுமதியும் சின்னப்பாவும் இந்தப்படத்தில் பிரதம பாகங்களில் தோன்றுகிறார்கள்.

1945-ம் வருஷத்தில் பானுமதிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. பையன் பரணி நக்ஷத்திரத்தில் பிறந்ததால் பையனுக்கும் பரணி என்றே பெயர் வைத்தார். தற்சமயம் பானுமதியும் ராமகிருஷ்ணவும் சொந்தத்தில் நடத்திவரும் படக் கம்பெனிக்கு "பரணி பிக்சர்ஸ்" என்று பெயர் வைத்திருப்பதிலிருந்து புதல்வன் பரணி மீது அவர்களுக்கு எவ்வளவு அபிமானம் என்பதை ஊகிக்கலாம்.

ஸ்ரீ பிரசாத் டைரக்ட் செய்த தெலுங்கு "கிருஹப்ரவேச"த்திலும் பானுமதி நடித்தார். இந்தப்படம் சமீபத்தில் தான் சென்னை நகரில் திரையிடப்பட்டது.

பானுமதியின் சொந்தக் கம்பெனியான பரணி பிக்சர் ஸாரின் தெலுங்கு "ரத்னமாலா"வில் பானுமதி பிரதம பாகத்தில் தோன்றினார். அவரது கணவன் ராமகிருஷ்ண டைரக்ட் செய்த இந்தப்படம் சமீபத்தில்தான் ஆந்திர ஜில்லாக்களில் திரையிடப்பட்டது. பல நகரங்களில் பத்து வாரங்களுக்குமேல் ஓடிய "ரத்னமாலா" பிரமாதமான பாக்ஸ் ஆபீஸ் வெற்றியாம்.

எம். கே. டி. பாகவதர் விடுதலை யடைந்ததும் நடிக்கும் முதல் படமாகிய 'ராஜமுக்தி'யில் கதாநாயகியாக பானுமதி ஒப்பந்தம் செய்யப்பட்ட செய்திதான் உண்மையில் தமிழ் ரசிகர்களுக்கு பானுமதியை அறிமுகப்படுத்திற்று எனலாம். நாளது தேதி வரை அவர் நடித்த தமிழ்ப்படம் எதுவும் திரையிடப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. பாகவதருடன் நடிக்கும் சந்தர்ப்பம் கிடைத்ததால் பானுமதியின் நக்ஷத்திர மதிப்பே உயர்ந்திருக்கிறது எனலாம்.

தற்சமயம் பானுமதி முருகன் டாக்கி பில்ம்ஸாரின் "ரத்னகுமா"ரிலும், ப்ரகதி "ராஜபக்தி"யிலும் நடித்து வருகிறார். நரேந்திரா பிக்சர்ஸாரின் "ராஜமுக்தி"யில் எம். கே. தியாகராஜ பாகவதருடன் கதாநாயகியாக நடித்து வருகிறார். இதைத்தவிர என்னெஸ்கே பில்ம்ஸாரின் "நல்ல தம்பி" தமிழ்ப் படத்திலும் நடித்து வருகிறார்.

தமது சொந்தக் கம்பெனியாகிய பரணி பிக்சர்ஸ் தயாரிக்கும் "புலந்திர"னில் பானுமதி டி. ஆர். மகாலிங்கத்துடன் பிரதம பாகத்தில் நடித்துக் கொண்டிருக்கிறார்.

நான்காவது பாரம் வரை படித்திருக்கும் பானுமதிக்குத் தெலுங்கு, தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, கன்னடம் ஆகிய ஐந்து பாஷைகளையும் எழுதவும், படிக்கவும், பேசவும் தெரியும். குதிரை சவாரி செய்வதிலும், துளைந்து துளைந்து நீந்துவதிலும் பானுமதிக்கு அலாதியான தேர்ச்சியும், பிரியமும் உண்டு.

ஒரு நக்ஷத்திரத்திற்குக் கட்டுவிடாத உடலமைப்பு அத்தியாவசியம் என்பதை உணர்ந்து தங்களது சரீர அழகைக் காப்பாற்றிக் கொள்ள விசேஷ சிரத்தையெடுத்துக் கொள்ளும் நக்ஷத்திரங்களில் முதல் ஸ்தானம்

பானுமதிக்குத்தான் கொடுக்கவேண்டும். அழகிற்குச் சிறந்த மார்க்கம் ஆரோக்யமான வாழ்க்கையும், தேகப்பயிற்சியும் தான் என்று பானுமதி கருதுகிறார். காலை ஐந்து மணிக்கே எழுந்து சென்னைக் கடற்கரை சென்று சுமார் ஐந்துமைல்கள் தினந்தோறும் ஓடுவார். பின்னர் வீடு திரும்பினால் ஒரு மணிநேரம் பரத நாட்டியம் கற்றுக்கொள்கிறார். ஸ்ரீ. வி. ராகவையா என்பவர்தான் பானுமதிக்குப் பரதநாட்டியப் பயிற்சியளித்து வரும் குரு.

தனது உடல் கட்டுவிடாமல் அழகாக இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் இப்படி ஓடி ஆடுகிறார் பானுமதி.

பானுமதிக்கு இரண்டு சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும்இருக்கிறார்கள். சகோதரர்களிருவரும் பரணி பிக்சர்ஸில் வேலைபார்த்து வருகிறார்கள். சகோதரிகளிலொருவர் ஜுபிடர் பிக்சர்ஸில் டைரக்டராக இருக்கும் ஸ்ரீ. நாராயணனை விவாகம் செய்து கொண்டிருக்கிறார். இவர் பிரம்மானந்தமாகப் பாடுவாராம். ஆனால் சினிமாவில் நடிப்பதை இவர் விரும்பவில்லையாம். மற்றொரு சகோதரி பரணி பிக்சர்ஸில் மானேஜராக இருக்கும் வாலிபருக்கு விவாகம் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறார்.

பானுமதியின் தாயார், தகப்பனார் ஓங்கோலில் இருக்கிறார்கள்.

பானுமதி புகழ்பெற்ற நடிகைமட்டுமல்ல, சிறந்த சிறுகதை எழுத்தாளரும்கூட. தமது தாய் பாஷையாகிய தெலுங்கில் இதுவரை சுமார் அறுபது கதைகள்வரை எழுதித் தள்ளியிருக்கிறார். ஆந்திர வாசகர்கள் இவரது கதைகளை விரும்பிப் படிக்கிறார்களாம். பானுமதியின் நடிப்பைவிட அவரது சிறுகதைகள் மூலமே ஆந்திராவில் அவர் பிரசித்தியடைந்தாராம்.

இதுவரை பானுமதி நடித்த எந்தப் படமும் தோல்வியடையவில்லை. அவர் நடித்த படங்களின் முதலாளிகள் யாரும் தலைமீது கைவைக்க வேண்டிய நிலை ஏற்படவில்லை. எல்லோருக்கும் நல்ல வசூலையே பானுமதியின் படங்கள் அளித்திருக்கின்றன.

பானுமதி தமது காதல் கணவனுடன் ஆனந்தகரமான

வாழ்க்கை நடத்திவருகிறார். கர்வம், படாடோபம் எதுவும் அவரிடம் கிடையாது. தமது கொள்கைப்படியே வாழ்க்கை நடத்திவருபவர் பானுமதி. அத்துடன் 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும்' குணமும் அவரிடம் இல்லை. மனதில் தாம் நினைப்பதை வெளிப்படையாகக் கூறிவிடுவார். இதனால் சிலர் பானுமதியை 'அகம்பாவமும் பிடிவாதமும் கொண்டவர்' என்று நினைக்கிறார்கள். இது சரியல்ல.

"வாழ்க்கையில் தங்களது லட்சியம் என்ன?" என்று பானுமதியிடம் கேட்டேன்.

"சினிமா உலகிலிருந்து வெளியே போ என்று ரசிகர்கள் கூறும்நிலை வரும் முன்பு புகழுடன் திரை உலகிலிருந்து விலகி விட வேண்டும் என்பதே எனது லட்சியம்," என்று சிரித்துக் கொண்டே 'பளிச்'சென்று பதிலளித்தார் பானுமதி. இதே லட்சியம் மற்ற நக்ஷத்திரங்களுக்குமிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

ஹிந்திப் படங்களிலும் நடித்து வட நாட்டாருக்குத் தென்னாட்டாரின் கலைத்திறமையை வெளிக் காட்டவேண்டுமென்ற ஆவலும் பானுமதிக்கு இருக்கிறது. "புலந்திரன்" படம் வெளியான பிறகு ஒரு ஹிந்திப்படம் தயாரிக்கவேண்டும் என்று அவர் திட்டம் போட்டிருக்கிறார்.

1924-ம் வருஷம் பிறந்த பானுமதிக்கு இயற்கையிலேயே அழகான அங்க அமைப்பு இருக்கிறது. ரோஜா இதழ்போன்ற நிறம்; அகன்று பரந்த கருவிழிகள்; சமத்காரமான பேச்சு; சங்கீத ஞானம் எல்லாம் சேர்ந்து அவரைத் தென்னாட்டின் பிரதான நக்ஷத்திரங்களிலொருவராகப் பிரகாசிக்கச் செய்திருக்கின்றன. எதிர்காலத்தில் பானுமதியின் புகழ் இன்னும் ஓங்கி வளரும் என்பதில் எனக்கு சந்தேகமே இல்லை.

# பி. எஸ். ஸரோஜா

தமிழ் நாட்டு நடிக நடிகையர்கள் ஒவ்வொருவரும் சினிமாத் துறையில் வெவ்வேறு வழிகளில் புகுந்திருக்கிறார்கள். முதல் படத்திலேயே பிரதம பாகத்தில் தோன்றி நடிக்கும்படி வற்புறுத்தப்பட்டு நடித்துப் புகழ்பெற்றவர்கள் சிலர். இவர்களை அதிர்ஷ்டம் தேடிவந்தது எனலாம். ஆனால் அந்த மாதிரி அதிர்ஷ்டம் எல்லோருக்குமே கிடைக்குமா என்ன? தற்போதைய முன்னணி நக்ஷத்திரங்களில் பலர் சிரமப்பட்டுத்தான் முன்னணிக்கு வந்திருக்கிறார்கள். அதற்காக ஒவ்வொருவரும் கடைப்பிடித்த வழிகள் ஒவ்வொரு விதமானது. ஆனால் ஸர்க்கஸ் வேலைகள் மூலம் நக்ஷத்திரப்பதவியை அடைந்தவர் பி. எஸ். ஸரோஜா ஒருவர்தான் என்று துணிந்து கூறலாம்!

"என்ன? பி. எஸ். ஸரோஜாவுக்கு சர்க்கஸ் வேலைகள் கூடத் தெரியுமா ஸார்?" என்று ஆச்சரியத்துடன் கேட்கிறீர்களல்லவா? ஆமாம், கயிறுமீது நடத்தல், தந்திக்கம்பி போன்ற மெல்லிய கம்பிமீது ஒற்றைச் சக்கர ஸைகிள் விடுதல் முதலிய சர்க்கஸ் வேலைகளில் பி. எஸ். ஸரோஜா கைதேர்ந்தவர் மட்டுமல்ல, அந்தத் தேர்ச்சிதான் சினிமா உலகில் நுழைய அவருக்கு உதவி செய்தது என்பது என்னவோ உண்மையே.

பி. எஸ். ஸரோஜாவின் வாழ்க்கை ரஸமான சம்பவங்கள் நிறைந்த வாழ்க்கை. ஆங்கிலத்தில் 'ரொமேண்டிக்' என்று சொல்கிறார்களே அந்த ரகத்தில் சேர்க்கப்பட வேண்டியது பி. எஸ். ஸரோஜாவின் 'ரொமேண்டிக்' வாழ்க்கையும்!

பி. எஸ். ஸரோஜா பிறக்கும் பொழுதே அதிர்ஷ்டத்துடன் பிறக்கவில்லை. 'அதிர்ஷ்ட லக்ஷ்மியின் கடாக்ஷம் சமீப வருஷங்களில்தான் என் மீது சிறிதாவது விழுகிறது,' என்று அவரே கூறுகிறார்!

பி. எஸ். ஸரோஜாவின் தகப்பனார் சைவ வேளாள ஜாதியைச் சேர்ந்தவர். திருவனந்தபுரத்தில் ஸரோஜாவின்

பாட்டனர் ஒரு ஹோட்டல் நடத்தி வந்தார். ஆனால் ஸரோஜா வளர்ந்து நடிப்பில் சிறந்து புகழ் பெறுவதைக் கண் குளிரக்கண்டு ஆனந்திக்கும் பாக்கியம் அவருக்குக் கிட்டவில்லை. ஸரோஜா ஒரு வயதுக் குழந்தையாயிருந்த பொழுதே அவர் இறந்து விட்டார்.

இந்த நிகழ்ச்சிக்குப்பின்னர் ஸரோஜாவின் தாயார் சேலத்தில் தனது தகப்பனர் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். குழந்தைப் பருவத்திலேயே ஸரோஜா சேலம் கான்வெண்டில் சேர்க்கப் பட்டார். ஏழாவது வயதுவரை அந்தக் கான்வெண்டில் ஸரோஜா படித்தார்.

அதன் பின்னர் ஸரோஜாவின் தாயார் தமது புதல்வியுடன் சென்னைக்கு வந்து சேர்ந்தார். சென்னையில் ராயபுரம் ஸெயின்ட் அந்தோணி கான்வென்ட் ஸ்கூலில் ஸரோஜா சேர்ந்து மூன்றுவது பாரம் வரை படித்தார்.

பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருக்கும் பொழுதே ஸரோஜாவுக்கு சினிமாமீது மோகம் விழுந்து விட்டது. எந்த சினிமா வந்தாலும் தவறுது போய்ப் பார்ப்பார். பள்ளிக்கூட நாடகங்களிலும் பங்கெடுத்துக்கொண்டு நடித்திருக்கிறார். நாடகங்களில் நடித்ததனுலும், பல சினிமாக்கள் பார்த்ததாலும் தானும் ஒரு சினிமா நடிகையாக வேண்டுமென்ற ஆவல் அவர் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டது. எப்படியாவது சினிமாவில் நடித்துப் புகழ்பெற்றே தீருவது என்று ஸரோஜா பள்ளிக்கூட மாணவியாக இருந்தபோதே கங்கணம் கட்டிக்கொண்டார்.

ஸரோஜாவின் வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் செல்லும் வழியில் ஒரு சர்க்கஸ் கம்பெனியார் கூடாரமடித்து சர்க்கஸ் வேலைகள் காட்டி வந்தார்கள். ஒவ்வொரு நாளும் பள்ளிக்கூடம் போகும்பொழுதும் திரும்பும்பொழுதும் ஸரோஜா அந்த சர்க்கஸ் கூடாரத்தைப் பார்த்துப் பார்த்துப் பொறுமுவார். அதிலும் ஒருநாள் சர்க்கஸ் காட்சியையும் பார்த்தவுடன் அவரது ஆவல் கட்டுக் கடங்காததாயிற்று. சர்க்கஸில் தோன்றிய பெண்களைப் போலவே தானும் சர்க்கஸ் வேலைகள் கற்றுப் புகழ்பெற வேண்டுமென்ற அடக்க முடியாத ஆவல் அவரை உந்தித்தள்ளிற்று. நேராகச் சென்றார் சர்க்கஸ்

முதலாளியிடம். "எனக்கும் சர்க்கஸ் வேலைகள் கற்றுக் கொடுங்கள்," என்று துணிச்சலுடன் முதலாளியைக் கேட்டார்.

முதலாளி ஸரோஜாவை ஏற இறங்கப் பார்த்தார். ஒரு நிமிஷம் யோசித்துவிட்டு, "உன்னால் இந்த வேலை யெல்லாம் கற்றுக்கொள்ள முடியாதம்மா," என்று அலட்சிய பாவத்துடன் தலையை ஆட்டினார். ஸரோஜா எவ்வளவோ கெஞ்சிக் கேட்டும் அந்த முதலாளியின் மனம் மாறவில்லை. விவரிக்க முடியாத துக்கத்துடனும் வெறுப்புடனும் வீடு திரும்பினார் ஸரோஜா.

ஆனால் அவர் தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை. நிலைக் கண்ணாடியின் முன் நின்று தன்னை ஒருதரம் நன்றாகப் பார்த்துக் கொண்டார். "நாம் மனது வைத்தால் முடியாதது எது?" என்ற எண்ணம்தான் அவர் மனதில் அப்பொழுது தோன்றிற்று.

முயற்சி செய்தால் முடியாத காரியம் எதுவுமில்லை என்று தமது வீட்டிலேயே பயிற்சியை ஆரம்பித்தார். சர்க்கஸில் பார்த்த பெண்கள் செய்ததைப் போலவே சில வேலைகள் செய்ய சிரமப்பட்டுக் கற்றுக்கொண்டு வெற்றியுமடைந்தார்.

அத்துடன் அவர் விடவில்லை. அதே சர்க்கஸ் முதலாளியைத் தமது வீட்டிற்கு அழைத்து அவர் முன்பு தமது சர்க்கஸ் வேலைகளைச் செய்து காண்பித்த பின்னர்தான் ஸரோஜாவுக்குத் திருப்தி ஏற்பட்டது.

குருவின் துணையின்றி ஸரோஜா தமது சொந்த முயற்சியால் கற்றுக்கொண்ட அந்த சர்க்கஸ் வித்தைகளைப் பார்த்து அந்த முதலாளியே பிரமித்து விட்டாராம்! அன்று முதல் ஸரோஜாவுக்கு எல்லாவிதமான ஸர்க்கஸ் வேலைகளும் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தார் அவர்.

அந்த முதலாளியின் உதவியால் ஸரோஜா விரைவில் பல வேலைகள் கற்றார். கயிறுமீது யாதொரு ஆதரவுமின்றி நடப்பது, மெல்லிய கம்பிமீது ஒற்றைச் சக்கர ஸைகிள் விடுவது முதலிய சிரமமான சர்க்கஸ் வேலைகளையும் கற்றுத் தேர்ச்சி பெற்றார். தற்போது வங்காள கவர்னராயிருக்கும்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் முன்பு ஸரோஜா சில சர்க்கஸ் வேலைகள் செய்துகாட்டி சில தேசியப் பாடல்களும் பாடினராம். ஆசாரியார் அவரது திறமையை மெச்சி ஒரு வெள்ளி மெடல் பரிசளித்தாராம்.

தற்பொழுது "ஆனந்த விகடன்" காரியாலயத்தில் உத்தியோகம் பார்த்து வரும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி என்பவர் அப்போது அந்த சர்க்கஸ் கம்பெனியில் தொடர்புடையவராக இருந்தார். அவரது உதவியால்தான் ஸரோஜா சினிமா உலகில் பிரவேசிக்க முடிந்தது. ஸரோஜாவின் வாளிப்பான சரீர அமைப்பும், குறுகுறுப்பான பார்வையும், சமத்கார மாகப் பேசும் திறமையும் சினிமாவில் நன்கு சோபிக்கும் என்று உணர்ந்த ஸ்ரீ. தக்ஷிணாமூர்த்தி மிகவும் பிரயாசை எடுத்து ஜெமினி 'மதனகாமராஜ'னில் ஸரோஜா நடிக்க ஏற்பாடு செய்தார். ஜெமினி "மதனகாமராஜ"னில்தான் ஸரோஜா முதன் முதலாகத் தோன்றி நடித்தார்.

"மதனகாமராஜ"னில் நடித்த பின்னர் கோஷ்டி நடனத்தில் அவர் மனம் ஈடுபட்டது. "கண்ணகி", "மஹா மாயா," "குபேர குசேலா," "பர்மா ராணி," "ராஜராஜேஸ்வரி" ஆகிய படங்களில் பி. எஸ். ஸரோஜா மற்றும் பல பெண்களுடன் சேர்ந்து நடனமாடி யிருக்கிறார். தற்போது நக்ஷத்திரப்பதவி பெற்றிருக்கும் ரஜனி, (யோக) மங்களம் முதலிய நடிகைகளும் பி. எஸ். ஸரோஜாவுடன் பல படங்களில் நடனமாடி யிருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட படங்களில் நடனமாடிக் கொண்டிருக்கும் பொழுது சரோஜாவின் வாழ்க்கையில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டது. அந்தப் படங்களில் டான்ஸ் மாஸ்டராக இருந்து நடனப்பெண்களுக்கு ஆடக்கற்றுக் கொடுத்தவர் ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த போலாநாத் என்பவர். அவரது சொந்த ஊர் சரித்திரப் பிரசித்திபெற்ற ஆக்ரா நகரம். ஸரோஜாவுக்கு நடனம் கற்றுக்கொடுக்கும் குருவாக இருந்த போலாநாத் அவருக்குக் காதல் வாழ்க்கையை போதிக்கும் குருவாகவும் மாறினர்! ஸரோஜா-போலாநாத் காதல் வளர்ந்து கொண்டே வந்தது.

குரு-சிஷ்யை காதல் நம் நாட்டிற்குப் புதிதல்ல. புராணங்

களிலேகூட அதற்குப் பல உதாரணங்களிருக்கின்றன. சன்னியாசி வேஷத்தில் வந்த அர்ஜுனன் தனக்குப் பணிவிடை செய்து வந்த சிஷ்யை சுபத்திரையிடம் காதல் புரியவில்லையா! கடைசியில் அர்ஜுனன் செய்த காரியத்தையே போலா நாத்தும் செய்தார். பேசாமல் ஸரோஜாவை விவாகம் செய்து கொண்டு விட்டார்! அவர்களது விவாகம் வைதீக முறைப்படி 1943-ம் வருஷத்தில் நடந்தேறியது.

அதன் பிறகு ஜெமினி ஸ்டுடியோவில் மாதச் சம்பளத்தில் உபநடிகையாக இரண்டு வருஷங்கள் வேலை பார்த்தார் ஸரோஜா. இந்த சந்தர்ப்பத்தில்தான் அவர் ஜெமினியின் "மங்கம்மா சபத"த்திலும் தோன்றினர். அந்தப் படத்தில் ரஞ்சன் 'டீ' கொடுக்கும் கட்டத்தில் கவனித்திருந்தால் ஸரோஜாவையும் நீங்கள் பார்த்திருக்கலாம்.

ஜயம்மா, அத்தங்கி முதலியோர் நடித்த "பிரம்ம ரதம்" தெலுங்குப் படத்திலும் ஸரோஜா நடித்திருக்கிறார்.

ஒப்பந்த காலம் முடிந்த பிறகு ஜெமினியை விட்டுத் தானகவே வெளியேறிய ஸரோஜா மீது டைரக்டர் கே. சுப்ரமண்யத்தின் கடாக்ஷம் விழ்ந்தது. தமது "விகடயோகி"யில் ஒரு முக்கியமான பாகத்தில் ஸரோஜாவைத் தோன்றி நடிக்கச் செய்தார் சுப்ரமண்யம். "விகடயோகி"யில் ஸரோஜா தமது பாகத்தைத் திறம்பட நடித்து ரசிகர்களின் ஆசியைப் பெற்றார்.

டைரக்டர் சுப்ரமண்யத்தின் அடுத்த படமாகிய "விசித்திர வனிதா"வில் ஸரோஜாவுக்குக் கதாநாயகி வேஷமே கிடைத்து விட்டது. "விசித்திர வனிதா"வில் ஸரோஜாவின் பேச்சும், நடிப்பும், நடனமும் ரசிகர்களுக்கு விருந்தாக விளங்குகின்றன.

"விசித்திர வனிதா"வில் நடித்து வந்த பொழுதே பி. எஸ். ராமையா டைரக்ட் செய்த "தன அமராவதி"யில் கதாநாயகியாக ஸரோஜா தோன்றினர். இந்தப் படம் சுமாரான வெற்றியைப் பெற்றது.

தற்போது ஸரோஜா "காளிதா"வில் கதாநாயகியாக வும், "பாமா விஜயத்"தில் பாமாவாகவும், ராயல் டாக்கீஸ் "சுதர்ஸ"னில் ருக்மிணியாகவும் நடித்து வருகிறார். இதைத் தவிர கே. சுப்ரமண்யம் டைரக்ட் செய்யும் "கீத காந்தி"யில் நடிக்கவும் அவர் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறார்.

ஸரோஜா - போலாநாத் தம்பதிகளுக்கு ஒரு பெண் குழந்தையிருக்கிறது. பெயர் கலாராணி. மூன்று வயது கூட முழுதாக நிரம்பாத இந்தக் கலாராணியின் முகத்தில் லக்ஷ்மிகளை தாண்டவமாடுகிறது. "கலாராணி அதிர்ஷ்டக் குழந்தை. அவள்தான் எங்களுக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டு வந்தாள்," என்று பெருமிதத்துடன் ஸரோஜா கூறும் பொழுது அவரது முகத்தில் தாயன்பு பொங்கி வழியும்!

ஸரோஜாவுக்கு இரண்டு ஸகோதரர்களும் ஒரு ஸகோ தரியுமிருக்கிறார்கள். ஸகோதரர்களிருவரும் ஸரோஜா வீட்டி லேயே இருந்துகொண்டு சென்னை ராமகிருஷ்ண மிஷன் ஹைஸ்கூலில் படித்து வருகிறார்கள். ஸகோதரி தனது தாயாருடன் திருவனந்தபுரத்தில் படித்து வருகிறார்.

தமிழ், மலையாளம், தெலுங்கு, ஹிந்தி, ஆங்கிலம் ஆகிய ஐந்து பாஷைகளிலும் ஸரோஜாவுக்கு நல்ல தேர்ச்சியுண்டு. இந்த பாஷைகளை எழுதவும், படிக்கவும், பேசவும் அவரால் முடியும்.

மணிபுரி, கதக், ஹிந்துஸ்தானி நாட்டியங்களில் ஸரோஜா கை தேர்ந்தவர்,—இல்லை, இல்லை, கால் தேர்ந்தவர்! தற் பொழுது பரத நாட்டியக்கலையையும் கரைகாணும் எண்ணத் துடன் முத்துஸ்வாமி நட்டுவனார் என்ற ஆசிரியரிடம் பரத நாட்டியப் பயிற்சிபெற்று வருகிறார். ஸரோஜா களக்காடு ராமநாராயண பாகவதர் என்பவரிடம் சிறிதுகாலம் கர்நாடக சங்கீத சிக்ஷை கற்றுக்கொண்டார். தற்போது கௌரி அம்மாள் என்பவரிடம் கர்நாடக சங்கீதப் பயிற்சிபெற்று வருகிறார்.

ஸைகிள் விடுவது, கத்திச்சண்டை போடுவது, சர்க்கஸ் வித்தைகள் செய்வது, தண்ணீரில் நீந்துவது, என்றால் ஸரோ ஜாவுக்குத் தண்ணீர்பட்ட பாடுதான்! இவை யெல்லாவற்றிலும் அவர் தேர்ச்சி பெற்றிருக்கிறார்.

ஓய்வு நேரங்களில் எம்பிராய்டரி, தோட்டவேலை, முதலிய வற்றை ஸரோஜா பொழுது போக்குக்காகச் செய்து வருகிறார். வீட்டில் எளிய உடையிலேயே காட்சியளிக்கிறார்.

"தன அமராவதி" ஸெட்டில் ஸரோஜாவைப் பார்த்த "பாமா விஜயம்" படமுதலாளி பாமாவாக நடிக்க ஸரோஜாவை ஒப்பந்தம் செய்துகொண்டார். அதன் பிறகு ஒருநாள் மாலை ஸரோஜாவின் வீட்டிற்கு அந்த முதலாளி வந்து வேலைக்கார னிடம் "ஸரோஜா எங்கே?" என்று விசாரித்தார். "இதோ இருக்கிறேன் ஸார்," என்று கூறிக்கொண்டே வந்து நின்றார் ஸரோஜா, தோட்ட வேலையைப் பாதியில் விட்டுவிட்டு. அவரது ஆடையில் சேறு படிந்திருந்தது. கையெல்லாம் களிமண், முகத்திலும் சில களிமண் துளிகள்! இந்தக் காட்சியைக் கண்ட முதலாளி, "இது என்ன கோலமம்மா? நீ எப்படித் தான் படத்தில் நடிக்கப் போகிறாயோ?" என்று அங்கலாய்த் தாராம்! பின்னர் ஸரோஜா "பாமா விஜயம்" ஸெட்டில் தோன்றி நடித்ததைப் பார்த்ததும் தான் முதலாளிக்குத் திருப்தி உண்டாயிற்று. "ஜமாய்த்து விட்டாயே ஸரோஜா; நான் தவறாகக் குறை கூறிவிட்டேனே," என்று வருத்தப்பட் டாராம்!

"காலை எழுந்தவுடன் படிப்பு; பின்பு கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு. மாலை முழுதும் விளையாட்டு," என்ற பாரதி யாரின் பாட்டைச் சிறிது மாற்றி ஸரோஜா அதன்படி நடந்து வருகிறார். காலையில் சங்கீதப்பயிற்சி; பின்னர் பரத நாட்டி டியப் பயிற்சி; மாலையில் தோட்டவேலை. இதுதான் அவரது தினப்படி வேலை.

தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகை தினங்கள் வந்து விட்டால் போதும். ஸரோஜா கரண்டியும் கையுமாக சமையல றையில் நுழைந்து விடுவார். மைசூர்ப்பாகு, ஹல்வா, ஜாங்கிரி என்று ஒன்றன்பின் ஒன்றாக அவர் தயாரித்து அனுப்பும் பக்ஷணங்களை பக்ஷணம் செய்ய முடியாமல் திணறுவார் கண வன் போலாநாத்!

"இந்தக் காலத்து நக்ஷத்திரங்களைப் பார்த்தீர்களா, ஸார்! குடியும் குடித்தனமுமாய் குழந்தை குட்டிகளுடன் வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். பழைய காலத்து நக்ஷத்திரங்களுக்குக்

குழந்தைகள் உண்டா? இருந்தாலும் சொல்லிக்கொள்ள வெட்கப்படுவார்கள்!'' என்று அழுதுகொண்டிருந்த கலா ராணியை சமாதானப் படுத்திக்கொண்டே கர்வத்துடன் என்னிடம் கூறினார் ஸரோஜா.

தமிழ்ப்பட உலகில் புதிய நக்ஷத்திர பரம்பரை ஆரம்பமாகி விட்டது என்பதை அப்பொழுதே நான் உணர்ந்தேன்.

ஸரோஜா தமிழ் நக்ஷத்திரங்களில் புதிய தலைமுறையைச் சேர்ந்தவர். வாளிப்பான சரீர அமைப்பும், கவர்ச்சிகரமான முகபாவமும் வாய்ந்தவர். அவருடன் பேசிக்கொண்டிருந்தால் பொழுது போவதே தெரியாது. அவ்வளவு சமத்காரமாகவும் ரஸமாகவும் பேசிக்கொண்டேயிருப்பார்.

தமிழ் சினிமா வானில் ஒளிவீசப் போகும் நாளைய நக்ஷத்திரங்கள் ஜாபிதாவில் ஸரோஜா ஒரு முக்கிய ஸ்தானத்தை வகிக்கிறார்.

# யோகம் மங்களம் சகோதரிகள்

"நவரச பானத் துரோணி" என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?

"அது என்ன ஐயா, தோணி?" என்று கேட்கிறீர்களோ? அப்படி வாருங்கள் வழிக்கு!

அடையாறு ஸ்ரீ ருக்மணி தேவிக்குப் பரத நாட்டியம் கற்றுக்கொடுத்த பந்தணைநல்லூர் நாட்டிய கலாநிதி ஸ்ரீ சு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் **யோகம் மங்களம் சகோதரி**களுக்கு அளித்த பட்டம்தான் "நவரச பானத்துரோணி" என்பது! இப்பொழுது தெரிந்ததா, எவ்வளவு அர்த்தபுஷ்டி நிறைந்த பட்டம் அது என்று.

யோகம் மங்களம் சகோதரிகள் மிகவும் உயர்ந்த குடும்பத்திலுதித்தவர்கள். அவர்களது சொந்த ஊர் தஞ்சாவூர் ஜில்லா, திருவையாறு க்ஷேத்திரத்திற் கருகிலுள்ள காருகுடி என்ற கிராமம். அஷ்ட சகஸ்ர பிராமண வகுப்பைச் சேர்ந்த மிராசுதார் சுப்பிரமணிய அய்யர் என்பவரது செல்வக் குமாரிகள்தான் புகழ் மணக்கும் இந்த நாட்டிய சகோதரிகள்.

மங்களம் 1930-ம் வருஷம் கும்பகோணத்தில் பிறந்தார். அவர் நான்கு வயதுக் குழந்தையா யிருந்தபொழுதே அவரது தகப்பனார் இறந்துவிட்டார். இதைக் கேட்டதும், "தமது குமாரிகள் புகழுடன் விளங்குவதைப் பார்க்க அவர் கொடுத்து வைக்கவில்லையே!" என்ற வருத்தம்தான் எனக்கு உண்டாயிற்று.

தகப்பனார் இறந்த பிறகும் அவர்களது தாயார் சொந்த கிராமமாகிய காருகுடியிலேயே இருந்து வந்தார். ஆனால், யோகம் மங்களம் சகோதரிகள் கும்பகோணத்தில் தங்களது பெரிய தாயார் வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள். பெரிய தாயார் வீட்டிலிருந்து கொண்டே பள்ளிக்கூடத்தில் சேர்ந்து இரண்டு சகோதரிகளும் படிக்க ஆரம்பித்தனர்.

முதலில் அவர்கள் படித்த பள்ளிக்கூடம் கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூல். அவர்களது படிப்புக்குப் பல பல இடை

யூறுகள் தோன்றின. இதனால் அவர்கள் படித்துவந்த பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு ஒன்றன்பின் ஒன்றாக இரண்டு, மூன்று ஹைஸ்கூல்களில் படிக்க நேர்ந்தது.

இடையூறுகளை லட்சியம் செய்யாமல் யோகம் நான்காவது பாரம்வரை படித்தார். மங்களம் மூன்றாவது பாரம் வரை படித்தார்.

இத்துடன் அவர்களது பள்ளிக்கூடப் படிப்பிற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. அவர்கள் படிப்பை நிறுத்திய தன் காரணமே மிகவும் விசித்திரகரமானது தான்!

அந்த சமயத்தில் யோகமங்களம் சகோதரிகளின் உறவினர்கள் சிலர் சினிமாவில் சேர்ந்து பிரபல நக்ஷத்திரங்களாகப் புகழ் பெற்றிருந்தார்கள். (அந்தப் பிரபல நக்ஷத்திரங்கள் யார் என்று கேட்கிறீர்களோ? 'ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே' என்ற புதுமொழியை நீங்கள் கேட்டதில்லை போலிருக்கிறது)! இறந்துபோன அவர்களது இளைய சகோதரி தங்கமும் ஒரு படத்தில் சிறுமியாக அப்பொழுது நடித்திருந்தார்.

இந்த நக்ஷத்திர உறவினர்களைப் பற்றி மற்ற உறவினர்கள் கேவலமாகப் பேசுவார்களாம். "என்ன சினிமா வேண்டியிருக்கிறது! தறுதலைகள்!" என்று தாறுமாறாகத் தூஷிப்பார்களாம். இதைக் கேட்க நேர்ந்த போதெல்லாம், "ஏன், சினிமாவில் நடித்தால் என்ன தவறு? நாட்டியமாடினால் என்ன குற்றம்?" என்று கேட்கத் தோன்றுமாம் யோகத்திற்கு.

வர வர, இந்த எண்ணமே அவர் மனதில் வேரூன்ற ஆரம்பித்துவிட்டது. கடைசியில், "சினிமாவில் நடிப்பதாலோ, நாட்டியமாடுவதாலோ, மற்றபடி கலாசேவை புரிவதாலோ ஒருவரது நடத்தை கெட்டுவிடாது என்று நிரூபிக்க வேண்டும்!" என்ற உறுதியான தீர்மானம் அவர் மனதில் படிந்துவிட்டது.

இந்த எண்ணத்தைத் தமது தாயாரிடமும் தெரிவித்து அவரையும் வழிக்குக் கொண்டுவந்தார் யோகம். தமது மூத்த புதல்வி யோகத்தின் ஆலோசனைப்படி தமது இரு குமாரி

களுடனும் அவர்களது தாயார் சென்னைக்கு வந்து சேர்ந்தார். இது நடந்து சுமார் எட்டு வருஷங்களாகின்றன.

சென்னைக்கு வந்து சேர்ந்த யோகம் மங்களம் சகோதரிகள் மணிபுரி, கதக் நடனங்கள் கொஞ்சம் கற்றுக்கொண்டு, முதன் முதலாகத் "தமிழறியும் பெருமாள்" என்ற தமிழ்ப் படத்தில் நடனமாடினார்கள். அதே படத்தில் பால கதா நாயகியாக மங்களம் நடிக்கவும் செய்தார்.

மணிபுரி, கதக் நடனங்கள் சிறிது கற்றதன் மூலம் நாட்டியக் கலையில் அவர்களுக்கு பேரபிமானம் ஏற்பட்டது. நாட்டியக் கலையில் எப்படியாவது நல்ல தேர்ச்சி அடைந்து புகழ்பெற வேண்டுமென்ற ஆர்வத்துடன் வைத்தீஸ்வரன் கோவில் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையிடம் இரு சகோதரிகளும் முறைப்படி பரத நாட்டியம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

எட்டே மாதங்களில் சகோதரிகளிருவரும் பரத நாட்டியக் கலையில் சிறந்த தேர்ச்சி பெற்றுவிட்டார்கள் என்று கேட்டபொழுது என்னால் நம்பவே முடியவில்லை! குருவின் அபாரத் திறமை இதற்குக் காரணமா, அல்லது சகோதரிகளின் கலை ஆர்வம்தான் இந்த அசாத்யமான காரியத்தை சாத்தியமானதாகச் செய்ததா? குருவின் திறமையுடன் சகோதரிகளின் ஆழ்ந்த கலாபிமானமும் சேர்ந்தே இது சாத்தியமாயிற்று என்று நான் நினைக்கிறேன்.

யோகம் மங்களம் சகோதரிகள் பரத நாட்டியம் கற்றுக் கொள்ள ஆரம்பித்தது 1944ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில். அதே வருஷம் செப்டம்பர் மாதத்தில் அவர்களது பரத நாட்டியம் அரங்கேற்றப் பட்டது. முதன் முதலில் அவர்கள் நாட்டிய அரங்கத்தில் தோன்றிய அன்றே ரசிகர்கள் அவர்களை அமோகமாகப் புகழ்ந்து உற்சாகமூட்டினார்கள்.

அன்றிலிருந்து இன்றுவரை தென்னாட்டின் பல ஊர்களிலும் யோகம் மங்களம் சகோதரிகள் பரத நாட்டியமாடி ரசிகர்களின் பேராதரவைப் பெற்று வருகிறார்கள். சென்னை, கோவை, மதுரை, திருச்சி, திருநெல்வேலி, சேலம், கடலூர், வேலூர், மாயவரம், முதலிய தமிழ் நாட்டின் முக்கியமான நகரங்களில் யோகம் மங்களம் சகோதரிகள் பரத நாட்டியம்

ஆடாத நகரமே கிடையாது என்றால் அவர்களுக்குப் பொது ஜன ஆதரவு எவ்வளவு இருக்கிறது என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

இவ்வளவுக்கும் இவர்கள் ஆங்காங்கேயிருக்கும் சபாக்களின் ஆதரவில் நடக்கும் கச்சேரிகளில்தான் நடனமாடுவார்கள். தவிர்க்க முடியாதபடி வந்தால்தான் கலியாணம் முதலிய வைபவங்களில் நடனமாடுவார்களே தவிர, சாதாரணமாகத் தனிப்பட்டவர்களின் வீடுகளில் இவர்கள் நடனமாடுவது கிடையாது.

"தமிழறியும் பெருமா"ளில் நடனமாடிய பின்னர் அவர்கள், கண்ணாம்பா நடித்த "ஹரிச்சந்திரா"வில் சேர்ந்து நாட்டியமாடி யிருக்கிறார்கள். அதற்குப் பிறகு மங்களம் மட்டும் "மஹாரதி கர்ண" என்ற ஹிந்திப் படத்தில் நடனமாடியிருக்கிறார். பிரசித்தி பெற்ற பாபுராவ் பண்டார்காரின் சகோதரர் பாலுஜி பண்டார்கார் டைரக்ட் செய்த படம் இது.

"ஜகதலப் பிரதாப"னில் மறுபடியும் இரு சகோதரிகளும் சேர்ந்து நாட்டியமாடி யிருக்கிறார்கள். மங்களம் தெலுங்கு "மாயா மச்சிந்திரா"விலும் 'கலிங்கா'வாக நடித்திருக்கிறார்.

இதற்குப் பிறகு படங்களில் நடனமாடுவதை நிறுத்தி விட்டு இரு சகோதரிகளும் தங்களது பரத நாட்டிய ஞானத்தை அபிவிருத்தி செய்துகொள்வதில் முனைந்தனர். ஆனால் நாட்டியக் கச்சேரிகளில் நடனமாடுவதை நிறுத்த வில்லை. தொடர்ந்து பல கச்சேரிகளில் நாட்டியமாடி வந்தார்கள்.

பிரசித்தி பெற்ற வடநாட்டு நாட்டிய நிபுணர் உதய சங்கர் இவர்களது பரத நாட்டியக் கச்சேரி ஒன்றில் தலைமை வகித்தார். சகோதரிகளின் நாட்டியத் திறமையும், பாவாபினயமும் அவரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டன. இவர்களது நாட்டியத் திறமையை வெகுவாகப் புகழ்ந்து, இவர்களுக்கு ஒரு வெள்ளிக் கோப்பையையும் பரிசாக அளித்தார் உதயசங்கர்.

1945ம் வருஷத்தில் யோகம் மங்களம் சகோதரிகள் தங்களது நாட்டியக் கலையின் துணையுடன் வட நாட்டில்

திக்விஜயம் செய்யக் கிளம்பினார்கள். கல்கத்தா, காசி, அலஹாபாத், லக்னோ, பம்பாய் முதலிய பல நகரங்களுக்கும் சென்று நாட்டியமாடிப் புகழ் பெறவேண்டும் என்ற ஆர்வத்துடன் இவர்கள் முதலில் கல்கத்தா சென்றார்கள். கல்கத்தாவில் நான்கு நாட்கள் தங்கி, இரண்டு மூன்று நாட்டியக் கச்சேரிகள் செய்வது என்ற திட்டத்துடன் சென்ற இவர்களைக் கல்கத்தா கலாரசிகர்கள் வழியனுப்பவே விரும்பவில்லை! கலை அன்பர்களின் அமோகமான ஆதரவும், அபிமானமும் இந்த நாட்டிய சகோதரிகளைக் கல்கத்தாவில் இரண்டு மாதத்திற்கு மேல் தங்கும்படி செய்துவிட்டன!

கல்கத்தாவில் இவர்களுக்குக் கிடைத்த புகழ் மாலைகளுக்கும் பரிசுகளுக்கும் கணக்கே யில்லை. "ஸ்டேட்ஸ்மன்", "ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்ட்", "அமிருத பஜார் பத்திரிகா," "ஆனந்த பஜார் பத்திரிகா" முதலிய கல்கத்தாப் பத்திரிகைகள் இவர்களது பரத நாட்டியத்தை வானளாவப் புகழ்ந்தன. புரொபஸர் அசோகநாத் சாஸ்திரி போன்ற பிரபல கலை அன்பர்களும், ரசிகர்களும் புகழ்மாரி பொழிந்து நாட்டிய சகோதரிகளை மூச்சுத் திணற அடித்துவிட்டார்கள்.

இவர்களது புகழ் 'சாந்திநிகேதன'த்திற்கும் எட்டிற்று. கவியரசர் ரவீந்திரநாத தாகூரின் புதல்வர் ஸ்ரீ. ரதீந்திர நாத தாகூர் இவர்களது கலைத் திறமையைப் பற்றிக் கேள்விப்பட்டார். கவியரசர் தாகூரின் பேத்தி ஸ்ரீமதி நந்திதா கிருபலானியை இவர்களை நேரில் சந்திக்க அனுப்பினார் ரதீந்திரநாத தாகூர். அவரது அழைப்பின் பேரில் யோகம் மங்களம் சகோதரிகள் குருதேவரின் சாந்திநிகேதனத்திற்கு விஜயம் செய்து பரத நாட்டியம் ஆடிக் கூடியிருந்தவர்களை மகிழ்வித்தார்கள். இவர்களது பரத நாட்டியத்தைப் பரவசத்துடன் அனுபவித்த ரதீந்திரநாத தாகூர் சகோதரிகளின் கலைத்திறனை வாயாரப் புகழ்ந்தார். விசேஷமாக சிவபெருமானின் ஆனந்த நடனத்தை இவர்கள் ஆடிக் காட்டியது அவரை ஒரேயடியாக ஆனந்த சாகரத்தில் ஆழ்த்திவிட்டதாம்.

இவர்கள் சாந்திநிகேதனத்திலிருந்து போவதையே ரதீந்திரநாத தாகூர் விரும்பவில்லை. "இங்கேயே பரத நாட்டியம் கற்றுக் கொடுத்துக்கொண்டு கலாசேவை புரிந்து கொண்டிருக்கலாமே," என்றாராம். "பரத நாட்டியக் கலை

ஒரு மகா ஸாகரம். அதன் ஒரு கோடியைக்கூட நாங்கள் முழுவதும் பார்க்கவில்லை. அப்படியிருக்க, நாங்கள் மற்றவர்களுக்கு அந்தக் கலையை எப்படி கற்றுக் கொடுக்க முடியும்?" என்று வினயத்துடன் சொல்லி நமது நாட்டிய சகோதரிகள் தப்பித்துக் கொண்டார்களாம்!

ஒரு நாள் கல்கத்தாவில் இவர்கள் நாட்டியமாடிக் கொண்டிருக்கையில் யாரும் அழைக்காமலே புகழ்பெற்ற நடனமாது **ஸாதனு போஸ்** அங்கு வந்து சேர்ந்தார். சகோதரிகளின் நடனம் அவரை மெய்மறக்கச் செய்தது. சகோதரிகளிருவரையும் மாலையிட்டுப் புகழ்ந்து ஆசிர்வதித்தார் அவர்.

பின்னர் தமது "அஜந்தா" என்ற ஹிந்திப் படத்தில் பரதநாட்டிய மாடும்படி ஸாதனுபோஸ் யோக மங்களம் சகோதரிகளைக் கேட்டுக் கொண்டார். ஆனால் அந்த சமயத்தில் யோகம் உடல் நிலை சரியாக இல்லாததால் இவர்கள் அந்தப் படத்தில் நடனமாட முடியாது போய்விட்டது.

யோகத்தின் தேக அசௌக்கியம் காரணமாகவே அவர்கள் தங்கள் திட்டப்படி வட நாட்டின் மற்ற நகரங்களில் நாட்டியமாட முடியாமல் சென்னைக்குத் திரும்பி வரும்படி ஆகிவிட்டது.

சென்னை திரும்பிய பிறகு இவர்கள் அடிக்கடி நாட்டியக் கச்சேரிகளில் நாட்டியமாடி வந்தனர். சென்னை 'பாங்க் வெட்டிங்' ஹாலில் கவர்னர் தம்பதிகள் முன் ஆடிய நடனத்தை கவர்னரின் மனைவி லேடி ஹோப் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டியிருக்கிறார். சென்னையில் அமெரிக்க சர்க்காரின் வைஸ்கான்ஸலாக இருந்த லூயி ஷாப்னர் என்பவரும் இவர்களது கலைக்குத் தமது உள்ளத்தைப் பறிகொடுத்தவர்களிலொருவர்.

பந்தணை நல்லூர் நாட்டிய கலாநிதி ஸ்ரீ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, உதய சங்கர், பாதம் நாராயணஸ்வாமி அய்யர், ஸர். ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், ஸாதனுபோஸ் முதலிய பல கலைஞர்களும், கலை அன்பர்களும் யோகமங்களம் சகோதரிகளைப் புகழ்ந்து பாராட்டியிருக்கிறார்கள்.

1946-ம் வருஷத்தில் மங்களம் மட்டும் "ருக்மாங்கத"னில் மோஹினியாக நடித்தார். அதில் அவரது பாகத்தைப் பொறுத்தவரையில் அவர் வெற்றிகரமாக நடித்திருக்கிறார் என்றே கூறவேண்டும்.

அதற்குப் பிறகு ஜுபிடர் "ஸ்ரீ முருக"னில் மங்களம் வள்ளியாக நடித்தார். இந்தப் படமும் சுமாரான வெற்றியைப் பெற்றது.

1947-ம் வருஷம் யோக மங்களத்தை யோகம் தேடி வந்தது. 'மேனு'வின் அடுத்த படமாகிய "வேதாள உலக"த்தில் டி. ஆர். மகாலிங்கத்துடன் கதா நாயகியாக நடிக்க மங்களம் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டார். 'மேனு' எடுக்கும் படம் என்றதுமே 'வெற்றி நிச்சயம்' என்று கூறிவிடலாம். "வேதாள உலகம்" படப்பிடிப்பு முக்காலே மூன்று வீசம் முடிவடைந்து விட்டதாம். விரைவில் படம் திரையிடப் படலாம் என்று தெரிகிறது. "வேதாள உலகம்" மூலம் மங்களம் புகழேணியின் உச்சியையே பிடித்து விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ராயல் டாக்கீஸாரின் "சுதர்சன்" படத்தில் ஊர்மிளா வாகவும் மங்களம் நடித்து வருகிறார்.

யோகம் மங்களம் சகோதரிகளிருவருக்குமே இன்னும் "விவாக யோகம்" கிட்டவில்லை! இருவரும் தங்களது தாயாருடன் வசித்து வருகின்றனர். இவர்களுக்குச் சொந்த வீடும், நிலபுலன்களும் தஞ்சாவூர் ஜில்லாவிலிருக்கின்றன.

ஆடம்பரமற்ற வாழ்க்கை நடத்திவரும் யோகம் மங்களம் சகோதரிகள் சுய விளம்பரத்தை நாடுவதுமில்லை; விரும்புவதுமில்லை. நடிப்புக்கலையில் ஆர்வம் மிகுந்த இவர்கள் எந்தப் படத்திலும், தட்டாது நடித்து முன்னுக்கு வரும் ஆவலுடன் இருக்கிறார்கள்.

இவர்களில் மூத்த சகோதரி யோகம் 1927ம் வருஷம் பிறந்தார். மோட்டார் ஓட்டுவதில் தேர்ச்சி பெற்றிருக்கிறார். இதைத்தவிர, வர்ண சித்திரம் வரைதல், 'நிட்டிங்' முதலியவற்றை உல்லாசப் பொழுதுப் போக்காகச் செய்து வருகிறார். சுமார் ஐந்து அடி உயரமும், சிவந்த மேனியும் உள்ள இவர்

சமூகப் படங்களில் அதிகம் சோபிப்பார் என்று நான் நினைக்கிறேன்.

இளைய சகோதரி மங்களம் 1930ம் வருஷம் பிறந்தார். மங்களமும் "நிட்டிங்"கில் கைதேர்ந்தவர். சித்திரம் வரையவும் அவர் கற்றுக்கொண்டு வருகிறார்.

புஸ்தகம், பத்திரிகை என்றால் யோகம் மங்களம் சகோதரிகளுக்கு உயிர்! பாஷைகள் கற்றுக்கொள்வதிலும் இரண்டு பேரும் புலிகள். யோகத்திற்கு ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி ஆகிய பாஷைகள் தெரியும். மங்களம் இவரைவிட ஒரு அடி முன்னே போய்விட்டார். ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி பாஷைகளுடன் மராட்டி பாஷையும் அவருக்குத் தெரியும்!

சுமார் ஐந்தேகால் அடி உயரமும், உயரத்திற்கேற்ற பருமனும், சிவந்த மேனியும், சினிமாவுக்கேற்ற முகவெட்டும் கொண்ட மங்களம் பிரபல நக்ஷத்திரமாக ஜ்வலிப்பதற்கு எல்லா விதத்திலும் தகுதி வாய்ந்தவர். சந்தர்ப்பம் கிடைத்தால் பிரபல நக்ஷத்திரமாகப் பிரகாசிக்கவும் செய்வார். 'மேனா'வின் "வேதாள உலகம்" அந்த சந்தர்ப்பத்தை யோகம் நிறைந்த மங்களத்துக்குக் கொடுத்திருக்குமென்று நம்பலாம்.

# மாலதி

நம் நாட்டில் எத்தனையோ பாட்டு வாத்தியார்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் பாட்டுக் கற்றுக்கொள்ளும் பெண்களைப் பற்றி அந்த வாத்தியார்களிடம் அபிப்பிராயம் கேட்டால் அவர்கள் அளப்பதே ஒரு தனி ரகத்தைச் சேர்ந்ததாயிருக்கும்.

"ஏன் ஸார், கிட்டு அய்யர் பெண் லக்ஷ்மி உங்களிடம் பாட்டுச் சொல்லிக் கொள்கிறாளே. அவளுடைய பாட்டு எப்படி?" என்று கேளுங்கள்.

"பாடினால் அவள் பாடணும், கேக்கணும்! என்ன சாரீர சப்பத்து! என்ன பிர்க்காக்கள்! பிரம்மானந்தம் போங்கோ!" என்றுதான் பதில் வரும்! தங்களது சிஷ்யைகளைப் பற்றிப் பிறரிடம் இழிவாகப் பேசும் பாட்டு வாத்தியார்களை நான் இனிமேல்தான் பார்க்க வேண்டும்!

பாட்டுச் சொல்லிக் கொடுக்கும் பொழுது, "என்னடீ இது! கழுதை கத்தறமாதிரி கத்தறே!" என்றும் "என்ன ஒரே அழுகையா அழ ஆரம்பிச்சுட்டயே," என்றும் பல விதமாகத் தங்களது சிஷ்யைகளின் குரலினிமையை அவர்கள் வர்ணிக்கலாம். ஆனால் மூன்றாம் மனிதர்களிடம் விட்டுக் கொடுத்துவிட மாட்டார்கள். "ஆஹா, அவள் பாட்டுக்கு இணை ஏது?" என்று புகழ்ச்சியாகத்தான் பேசுவார்கள்!

இவ்வாறு புகழ்ச்சியாகப் பல சங்கீத உபாத்தியாயர்கள் தங்கள் சிஷ்யைகளைப் பற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள். அதனால் விசேஷமான பலனெதுவும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், பாட்டு வாத்தியார் கிருஷ்ணமாச்சாரியார் தமது சிஷ்யை மாலதியைப்பற்றி இவ்வாறு புகழ்ச்சியாக ஒரு நண்பரிடம் அகஸ்மாத்தாகக் கூறியதனால்தான் கிராமப்பெண் மாலதி இன்று நக்ஷத்திர நடிகை மாலதியாக மாறியிருக்கிறாள் என்பது மட்டும் உண்மை!

"என்னிடம் ஒரு பெண் பாட்டுக் கற்றுக் கொள்கிறாள். என்ன இனிமையான குரல்! கந்தர்வகானம் போங்கோ!"

என்று கிருஷ்ணமாச்சாரியார் ஒருநாள் தமது நண்பரொருவரிடம் கூறினர். எல்லூரில் ஒரு மூலையில் குடத்திலிட்ட விளக்குப் போலிருந்த மாலதி அந்த மூன்று வாக்கியங்களின் விசேஷத்தால் இன்று குன்றின் மேலிட்ட விளக்குப்போல் பிரகாசிக்கிறார்.

சினிமா உலகில் பிரவேசிக்க வேண்டுமென்று மாலதி நினைத்ததுமில்லை. நக்ஷத்திரமாக ஜ்வலிக்க முடியுமென்று அவர் கனவு கண்டதுமில்லை. ஆனால் தற்செயலாக, சற்றும் எதிர்பாராத முறையில் மாலதிக்கு சினிமா உலகில் நுழைய சந்தர்ப்பமும், நக்ஷத்திரப்பதவி பெறும் அதிர்ஷ்டமும், கிடைத்தன.

ஆந்திர நாட்டில் மேற்கு கோதாவரி ஜில்லாவைச் சேர்ந்த எல்லூர்தான் மாலதியின் சொந்த ஊர். அவரது தகப்பனர் எல்லூரில் ஒரு நிலசுவான்தார்.

செல்வத்தில் பிறந்த மாலதி எல்லூர் ஹைஸ்கூலில் சேர்ந்து படித்து வந்தார். பள்ளிப்படிப்புடன் வீட்டில் சங்கீத சிக்ஷையும் தவறாது நடந்து வந்தது. ஸ்ரீ. கிருஷ்ணமாச்சாரி என்ற சங்கீத வித்வான் சிறுவயதிலிருந்தே மாலதிக்கு சங்கீதம் கற்பித்து வந்தார்.

பள்ளிக்கூட நாட்களிலேயே மாலதிக்கு நாடகங்களில் நடிப்பதில் அபார ஆர்வம் இருந்து வந்தது. பள்ளிக்கூட வருஷாந்தரவிழா, பெற்றோர்தினம் முதலிய வைபவங்களுக்காக நடக்கும் நாடகங்களில் பல பல வேஷங்களில் மாலதி தோன்றி நடித்துப் புகழ்பெற்றார்.

மாலதி நான்காவது பாரத்தில் படித்துக் கொண்டிருக்கும் பொழுது அவரது விவாகத்தைப் பற்றிய பேச்சுவார்த்தைகள் ஆரம்பமாயின. எல்லூரிலேயே மாலதி வசித்துவந்த தெருவிற்கு அடுத்த தெருவில் வசித்துவந்த வீராச்சாரி என்பவருக்கு மாலதியை விவாகம் செய்து கொடுப்பதற்காக ஏற்பாடுகள் ஆரம்பமாயின. ஆகவே மாலதி பள்ளிப் படிப்பை நிறுத்தி விட்டு விவாக சுபதினத்தை எதிர்பார்க்கலானர்!

1937ம் வருஷம் அக்டோபர் மாதம் வீராச்சாரிக்கும் மாலதிக்கும் ஹிந்து மத சம்பிரதாயப்படி ஐந்து நாள் கலி

யாணம் விமரிசையாக நடந்தது. மணமகன் வீராச்சாரி கலை ஆர்வம் மிகுந்தவர். எல்லூருக்குப் பல நாடகக் கம்பெனிகளை வரவழைத்து கண்ட்ராக்டில் பல நாடகங்களை நடத்திவந்தார். மாலதியின் மணவாழ்க்கை இன்பமாக நடந்து வந்தது. அப்பொழுது சினிமா உலகில் தற்செயலாக எதிர்பாராத விதமாக மாலதி நுழைய நேர்ந்தது.

மாலதியின் சங்கீத உபாத்தியாயர் ஸ்ரீ. கிருஷ்ணமாச்சாரியார் ஸினிமாத்துறையில் ஆர்வம் மிகுந்தவர். 'கச்ச தேவயானி,' 'சதி அனசூயா' முதலிய தெலுங்குப் படங்களில் உப நடிகராக நடித்துமிருக்கிறார். சென்னையில் சரஸ்வதி ஸ்டோர்ஸ் என்ற பிரலித்திபெற்ற கிராமபோன் ரிகார்டு கம்பெனி இருக்கிறதல்லவா? அந்தக் கம்பெனியில் 'ரிகார்டிங் ரெப்ரசென்டடிவ்' ஆக வேலை பார்த்துவந்த நண்பருக்கும் கிருஷ்ணமாச்சாரியாருக்கும் நெருங்கிய பரிச்சயம் உண்டு.

அந்த சமயத்தில் தெலுங்கு 'கச்சதேவயானி' நாடகத்தை கிராமபோன் ரிகார்டுகளில் பதிவு செய்ய வேண்டுமென்று சரஸ்வதி ஸ்டோர்ஸார் ஏற்பாடு செய்து வந்தார்கள். அதில் பங்கெடுத்துக்கொள்ள இனிய குரலும் சங்கீதஞானமுமுடைய ஒரு பெண் வேண்டுமென்று ரிகார்டிங் ரெப்ரசென்டடிவ் வேலை பார்த்துவந்த நண்பர் கிருஷ்ணமாச்சாரியிடம் பேச்சு வாக்கில் தற்செயலாகக் கூறினார்.

"என்னிடம் ஒரு பெண் சங்கீத சிக்ஷைசொல்லிக் கொள்கிறாள், அபார ஞானம்! இனிமையான குரல்!" என்று உடனேயே வர்ணிக்க ஆரம்பித்தார் கிருஷ்ணமாச்சாரி.

"யாரையா அந்தப்பெண்?" என்று ஆவலுடன் கேட்டார் நண்பர்.

"பெயர் மாலதி. எல்லூரிலிருக்கிறாள்," என்றார் கிருஷ்ணமாச்சாரி.

நண்பர் நிற்கவில்லை. அடுத்த ரயிலில் கிருஷ்ணமாச்சாரியுடன் எல்லூருக்கு வந்து சேர்ந்தார். மாலதியை சந்தித்து அவரது பாட்டுக்களையும் கேட்டார். பாட்டு அவருக்குப் பிடித்துவிட்டது. 'கச்சதேவயானி' நாடக செட்டில்

பங்கெடுத்துக் கொள்ள மாலதியை ஒப்பந்தம் செய்துவிட்டுத் திரும்பினார். அதிலிருந்து மாலதிக்கு சுக்ரதசை ஆரம்பமாயிற்று.

இந்த உலகில் துன்பம் தனித்துவருவதில்லை. இன்பமும் அப்படித்தான். ஒரு சந்தோஷச் செய்தி கிடைத்தால் அதைத் தொடர்ந்து ஒன்பது சந்தோஷச் செய்திகள் ஓடி வரும்.

'கச்சதேவயானி' நாடகத்தை ரிகார்டுகளில் பதிவு செய்வதற்காக மாலதி சரஸ்வதி ஸ்டோர்சுக்கு கணவன் வீராச்சாரியுடன் சென்றார். அவரது இனிய குரலைக் கேட்ட சரஸ்வதி ஸ்டோர்ஸார் "யூகாலி உஜ்யாலா" என்ற ஊஞ்சல் பாட்டையும் மற்றொரு தெலுங்குப் பாட்டையும் மாலதியைப் பாடச் செய்து ரிகார்டு செய்தார்கள். இந்த "யூகாலி உஜ்யாலா" என்ற பாட்டின் கர்த்தா யார் தெரியுமா? தற்போது தென்னிந்தியா முழுவதிலும் புகழுடன் விளங்கும் நடிக நக்ஷத்திரம் வி. நாகையாதான்.

ஸரஸ்வதி ஸ்டோர்விஸில் மாலதி இனிமையாகப் பாடிக் கொண்டிருந்த அதே சமயத்தில் வாஹினி பி. என். ரெட்டியும் அங்கே வந்து சேர்ந்தார். 'வந்தேமாதரம்' தெலுங்குப் படத்தின் பாட்டுக்களைப் பதிவு செய்வதற்காக வந்த அவர் மாலதியின் இனிய சங்கீதத்தில் அப்படியே சொக்கிவிட்டார். மாலதியை எப்படியாவது தமது படங்களில் நடிக்கும்படி செய்யவேண்டும் என்ற ஆவல் உடனேயே அவர் மனதில் வேரூன்றியது. தமது அடுத்த படமாகிய "சுமங்கலி"யில் மாலதியை நடிக்கச் செய்ய வேண்டுமென்று தீர்மானித்து மாலதியின் கணவர் வீராச்சாரியிடம் பேச்சுக் கொடுத்தார் பி. என். ரெட்டி.

கலை ஆர்வம் மிகுந்த வீராச்சாரிக்குத் தமது மனைவி மாலதி படங்களில் நடித்துப் புகழ் பெறுவதில் சந்தோஷந்தான். ஆனால் தந்தையின் அனுமதி யில்லாமல் எந்த விஷயத்திலும் வீராச்சாரி தலையிடுவது கிடையாது.

"என் தகப்பனாரின் அனுமதி இல்லாமல் மாலதி படங்களில் நடிக்க முடியாது," என்றார் வீராச்சாரி பி. என். ரெட்டியிடம்.

"சரி, உங்கள் தகப்பனாரை நான் தாஜா பண்ணிக் கொள்கிறேன். அவரது விலாசமென்ன?" என்று கேட்டார் ரெட்டி.

வீராச்சாரி தனது தந்தையின் விலாசத்தை எழுதிக் கொடுத்தார்.

உடனேயே பி. என். ரெட்டியிடமிருந்து வீராச்சாரியின் தந்தைக்கு ஒரு கடிதம் பறந்தது. "சுமங்கலி"யில் கிராம கதாநாயகி பார்வதியாக நடிக்க மாலதியை அனுமதிக்கும்படி பி. என். ரெட்டி அக்கடிதத்தில் கேட்டுக் கொண்டிருந்தார்.

வீராச்சாரியின் தந்தை பழைய காலத்து ஆசாமி. வைதீகப் பழக்க வழக்கங்களில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர். பி. என். ரெட்டியின் கடிதத்தைக் கண்டதும் அவர் சீறி எழுந்தார். "மாலதியாவது படங்களில் நடிப்பதாவது! இதெல்லாம் யார் செய்த வேலை?" என்று வீராச்சாரியைப் பார்த்துக் கூச்சல் போட்டார் தகப்பனார்.

சென்னையில் நடந்த விஷயங்களை விஸ்தாரமாக வீராச்சாரி தனது தந்தைக்கு விவரித்துக் கூறிவிட்டு மாலதி 'சுமங்கலி'யில் நடிக்க அனுமதி கொடுக்கும்படி கேட்டார்.

தகப்பனாரின் கோபம் இன்னும் அதிகரித்தது. மாலதி படங்களில் நடிக்கவே கூடாது என்று கண்டிப்பாக உத்தர விட்டுவிட்டார்.

வீராச்சாரிக்கோ மாலதி படங்களில் நடிக்க வேண்டுமென்ற ஆவல். தகப்பனாரோ கண்டிப்பாக அதை எதிர்க்கிறார். என்ன செய்வது? வீராச்சாரி எவ்வளவோ கெஞ்சிக் கூத்தாடியும் தந்தையின் மனம் மாறவில்லை. வேறு வழியில்லை என்று தெரிந்ததும் வீராச்சாரி தமது ரகசிய ஆயுதத்தைப் பிரயோகம் செய்தார்! "மாலதி படங்களில் நடிப்பதற்கு அனுமதி கொடுக்காவிட்டால் தற்கொலை செய்து கொண்டு இறந்துவிடுவேன்!" என்று வீராச்சாரி பயமுறுத்தினார். அவ்வளவுதான். தகப்பனாருக்கு உதறல் எடுத்துவிட்டது! அடுத்த நிமிஷமே தமது சம்மதத்தைத் தெரிவித்துவிட்டார்.

இவ்வாறு ஏக அமர்க்களத்துடன் மாலதி முதன் முதலாக நடித்த படம்தான் வாஹினியாரின் "சுமங்கலி". தமிழர்களாலும் ரஸிக்கப்பட்டு தமிழ் நாட்டிலும் நல்ல வெற்றி பெற்ற ஒரு சில தெலுங்குப் படங்களில் வாஹினியாரின் "சுமங்கலி"யும் ஒன்று. "சுமங்கலி"யைப் பார்த்த ஒவ்வொருவரும் அந்தப் படத்தில் கிராம கதாநாயகி பார்வதியாகப் பாடி நடித்த மாலதியை வாயாரப் புகழ்ந்தார்கள். அவரது பாட்டுக்களை பொது ஜனங்கள் மிகவும் ரஸித்தார்கள். முக்கியமாக "ஓஸ்தாடே மா பாவா" என்ற பாட்டு ரஸிகர்களின் அமோகமான ஆதரவைப் பெற்றது. "ஓஸ்தாடே மா பாவா" கிராமபோன் ரிகார்டுகள் இதுவரை அறுபதாயிரத்துக்கு மேல் விற்பனையாகி யிருக்கின்றனவாம்.

மாலதி முதன் முதலாகத் தோன்றி நடித்த படம் 'சுமங்கலி' என்பதைப் பலர் நம்பக்கூட இல்லை. அவ்வளவு இயற்கையாக மாலதி அந்தப் படத்தில் நடித்திருக்கிறார்.

"சுமங்கலி"யின் பிரமாதமான வெற்றிக்குப் பின்னர் நாகையாவின் 'பாக்யலக்ஷ்மி'யிலும் வாஹினியாரின் 'போதன'வில் நாகையாவுடனும் மாலதி பிரதம பாகத்தில் நடித்தார். 'சுமங்கலி'யில் மாலதி பெற்ற புகழ் இவ்விரு படங்கள் மூலமும் நிரந்தரமாயிற்று. அதன் பின்னர் "மாயா மச்சீந்திரா" தெலுங்குப் படத்தில் மாலதி நடித்தார்.

அதற்குப் பிறகு தமிழ்ப் படங்கள் மாலதியை ஸ்வீகரித்துக் கொண்டன. அவரைத் தமிழ்ப் படங்களில் நடிக்கச் செய்த பெருமை முழுவதும் 'கோடாக்' கம்பெனி ஸ்ரீனிவாசனுக்குத்தான் சேரவேண்டும். ஸ்ரீனிவாஸனின் தூண்டுதலின் பேரில் தமிழ்ப் படங்களில் நடிக்க மாலதி முன்வந்தார். அவர் முதன் முதலாக நடித்த தமிழ்ப்படம் மாடர்ன் தியேட்டர்ஸாரின் "சுபத்திரா". கே. எல். வி. வஸந்தா சுபத்திராவாக நடித்த இந்தப் படத்தில் மாலதி ருக்மிணியாக நடித்தார். இந்தப் படத்தில் நடிக்க மாலதியை ஒப்பந்தம் செய்து வைத்தவரும் 'கோடாக்' ஸ்ரீனிவாஸன் தான.

"சுபத்திரா"வுக்குப் பிறகு ஜுபிடரின் "ஸ்ரீ முருக"னில் மாலதி நடித்தார். இதில் அவர் நடிப்பதற்கு ஆஸ்பதமாயிருந்தவரும் ஸ்ரீனிவாசன்தான். அதைத் தொடர்ந்து

ஜுபிடரின் "ராஜகுமாரி"யில் கதாநாயகியாக நடித்தார். "ராஜகுமாரி" நல்ல வெற்றியைப் பெற்றது. அதில் மாலதியின் பேச்சும், நடிப்பும், பாட்டும் ரஸிகர்களின் பாராட்டுதலைப் பெற்றன.

இந்த சமயத்தில் மாலதி ரத்ன ஸ்டூடியோஸாரின் "யோகி வேமன்ன"வில் கதா நாயகியாக நடிக்க ஒப்பந்தம் செய்யப்பட்டார். பி. யு. சின்னப்பா பிரதம பாகத்தில் தோன்றும் இப்படத்தின் ஷூட்டிங் விரைவில் ஆரம்பமாகலாம். கார்த்திகேயா பில்ம்ஸாரின் 'உஷா'விலும் டி. ஆர். மகாலிங்கத்துடன் பிரதம பாகத்தில் நடிக்க மாலதி ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறார்.

மாலதியின் கணவர் வீராச்சாரி மற்றொரு நண்பரின் கூட்டுறவுடன் ஹிந்த் ஆர்ட் பில்ம்ஸ் என்ற படக் கம்பெனி ஒன்றை நடத்திவருகிறார். இந்தக் கம்பெனியின் "சதிமணி" தமிழ்ப் படத்தில் மாலதி கதா நாயகியாக நடித்து வருகிறார்.

இதைத் தவிர மஹதி பிக்சர்ஸாரின் "லக்ஷ்மம்மா" தெலுங்குப் படத்திலும் பிரதம பாகத்தில் நடித்து வருகிறார்.

மாலதிக்குக் குழந்தைகள் என்றால் அபார வாத்ஸல்யம். ஆனால் அவருக்கு இதுவரை புத்திரபாக்கியம் கிடைக்கவில்லை. பல தூர பந்துக்களின் குழந்தைகள் அவர் வீட்டிலேயே வளர்ந்து வருகின்றன.

தெலுங்கைத் தாய் பாஷையாகக் கொண்ட மாலதிக்குத் தமிழிலும் நல்ல தேர்ச்சியுண்டு. வீட்டில் ஆங்கிலமும் ஹிந்தியும் படித்து வருகிறார். காசி சர்வகலாசாலையினர் நடத்தும் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறும் உத்தேசத்துடன் மாலதி ஊக்கமாகப் படித்துவருகிறார்.

சங்கீதத்தில் பாண்டித்தியம் பெற்ற மாலதிக்கு பரத நாட்டியமும் ஆடத் தெரியும். ஜுபிடரின் "ஸ்ரீ முருக"னில் இவாது சிவதாண்டவநடனம் பொது ஜனங்களால் மிகவும் பாராட்டப்பட்டது.

புத்தகங்கள், பத்திரிகைகள் படிப்பது, ஆங்கில சினிமாக்கள் பார்ப்பது, தலைவர்களின் பிரசங்கங்களை ரேடியோ

வில் கேட்பது, குழந்தைகளுடன் விளையாடுவது இவற்றில் மாலதிக்கு அமோகமான ஆர்வமிருக்கிறது. தெலுங்கில் சிறு கதை எழுதுவதிலும் இவருக்குத் தேர்ச்சியுண்டு. பல சிறு கதைகள் எழுதி வைத்திருக்கிறார். ஆனால் அவை இன்னும் பிரசுரமாகவில்லை!

மாலதிக்கு உடன் பிறந்த சகோதரர்கள் கிடையாது. ஒரே ஒரு சகோதரிதான் இருக்கிறார். அவர் எல்லூரில் இல்லற வாழ்க்கை நடத்திவருகிறார். மாலதியின் தாயும் எல்லூரில்தான் வசித்து வருகிறார்.

எல்லூரில் மாலதிக்கு சொந்த பங்களாவும் நிலபுலன் களும் இருக்கின்றன. சினிமா வாழ்க்கையிலிருந்து 'ரிடையர்' ஆன பிறகு தோட்டத்தின் நடுவில் சந்தடி யில்லாமல் அமைதியாகத் தனது வாழ்நாளைக் கழிக்க விரும்புகிறார் மாலதி.

பதினாறு வயதுக் குமரியிலிருந்து அறுபது வயதுக் கிழவிவரை எல்லா பாகங்களிலும் நடித்துப் புகழ்பெற வேண்டுமென்ற ஆவலும் துடிதுடிப்பும் மாலதிக்கு இருக் கின்றன. தயாரிப்பிலிருக்கும் அவரது படங்களின் மூலம் அவரது புகழ் இன்னும் அதிகரிக்கும் என்று எதிர் பார்க்கிறேன்.

## 'பகுனி' எம். எஸ். பாக்கியம்

என் வீட்டிற்கு அடுத்த வீட்டில் குடியிருக்கும் ராமுடு அய்யர் மீது எனக்கு இருந்த ஆத்திரத்திற்குக் கணக்கே யில்லை. சிறிது காலத்திற்கு முன்புவரை அடுத்த வீட்டு ராமுடுவைப் போன்ற படித்த முட்டாளும் கிராதகனும் இந்த உலகத்திலேயே கிடையாது என்ற ஆழ்ந்த நம்பிக்கையுட னிருந்துவந்தேன். விஷயம் வேறொன்றுமில்லை. ராமுடு அய்யரின் முதல் மனைவி மூன்று குழந்தைகளை விட்டுவிட்டு சிவலோகப்ராப்தி அடைந்தாள். முதல் மனைவி இறந்த ஒரு வருஷத்திற்குள் ராமுடு இரண்டாந் தாரமாக ஒரு தாட கையை மணந்து கொண்டார். அதுமுதல் அடுத்த வீடு நரக லோகத்தின் நகல்போல் காட்சியளிக்கிறது. இரண்டா வது மனைவியின் சொல்லைக் கேட்டு முதல் மனைவியின் குழந்தைகளை அந்த ராமுடு படுத்தும் பாடு சொல்லி முடி யாது. யம கிங்கரனிடம் அகப்பட்டுக் கொண்ட பாபியின் ஆத்மாபோல் அந்தக் குழந்தைகள் மூன்றும் துடிதுடித்துக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு நாளும் இரவு அய்யர் குழந்தைகளை அடிக்கும் சப்தமும் குழந்தைகள் வீறிட்டு அலறும் சப்தமும் நாற்பது வீடுகளுக்குக் கேட்கும். நாற்பது வீடுகளிலும் குடியிருக்கும் நபர்கள் தூங்க முடியாமல் ராமுடுவைச் சபித்தவாறே இரவுப் பொழுதைக் கழிப்பார்கள். இந்த நாற்பது வீடுகளில் அடியேன் வீடும் ஒன்றாகையால் ராமுடுவைப் படித்த முட்டாள், கிராதகன் என்றெல்லாம் தூற்றும் நபர்களில் நானும் ஒருவனாக இருந்து வந்தேன்!

ஆனால் இப்பொழுது ராமுடு அய்யரைப் பற்றி நான் கொண்டிருந்த அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டு விட் டேன். கலை வளர்ச்சிக்கு மறைமுகமாக சேவை புரியும் புருஷோத்தமர்களில் முதல் பரிசு ராமுடுவுக்குத்தான் கொடுக்கவேண்டும் என்று அடித்துக் கூறவும் தயாரா யிருக் கிறேன்!

என் இந்த விசித்திர மாறுபாடு என்று கேட்கிறீர் களோ? இந்த 'பகுனி' எம். எஸ். பாக்கியத்தின் வாழ்க்கை

வரலாறு தெரிந்தவுடன்தான் ராமுடு அய்யரின் மறைமுக மான கலா சேவையையும் நான் பாராட்ட முடிந்தது !

பாக்கியத்தின் முழுப் பெயர் எம். சிவபாக்கியம். ஆனல் சினிமாத் துறையில் ஏற்கனவே மற்றொரு பிரபல சிவபாக் கியம் இருந்து வந்தபடியால் தமது பெயரை எம். எஸ். பாக்கியம் என்று சுருக்கிக் கொண்டார்.

பாக்கியம் திருச்சினுப்பள்ளி ஜில்லாவிலுள்ள மருங்காபுரி ஜமீனைச் சேர்ந்தவர். அவரது தகப்பனர் நல்லசிவன் பிள்ளை மருங்காபுரி ஜமீன் ஆபீசிலேயே வேலை பார்த்துவந்தார்.

பாக்கியம் சிறுவயதுக் குழந்தையாய் இருந்தபொழுதே அவரது தாயார் இறந்துவிட்டார். தாயார் இறந்த பிறகு அவரது தகப்பனர் பாக்கியத்தையும் அவரது ஒரே சகோ தரியையும் புறக்கணிக்கத் தொடங்கினர். அவர்களது பரா மரிப்பை அவர் கவனிக்கவேயில்லை. உண்ண உணவும், உடுக்க உடையும் அவர்களுக்குக் கிடைக்கிறதா என்று கூடக் கவ னிக்காமல் தமது மற்றொரு மனைவியுடன் அவர் உல்லாசமாக இருந்து வந்தார்.

பெற்ற தந்தையால் புறக்கணிக்கப்பட்ட பாக்கியம் சகோ தரிகளை அவர்களது தாயைப் பெற்ற பாட்டிதான் காப்பாற்றி வந்தார். தாத்தா பாட்டியின் பராமரிப்பின் கீழ் பாக்கியம் மருங்காபுரிப் பள்ளிக்கூடத்திலேயே ஆருவது வகுப்புவரை படித்தார். அவர் ஆருவது வகுப்பில் படித்துக் கொண்டிருக் கும்பொழுது மற்றொரு விபத்தும் நேரிட்டது. அவர்களை அதுவரை காப்பாற்றி வந்த பாட்டனர் இறந்துவிட்டார். அப்பொழுது பாக்கியத்திற்கு வயது பதினென்றுதான்.

பாட்டனர் இறந்ததும் பாட்டி பாக்கியத்தையும் அவரது சகோதரியையும் மிகவும் கஷ்டப்பட்டுக் காப்பாற்றி வந்தார். தங்களுக்கு உண்ண உணவும் உடுக்க உடையும் கொடுப்பதற் காகத் தங்களது பாட்டி படும் கஷ்டத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க பாக்கியத்தால் முடியவில்லை. தானும் ஏதாவது சம்பாதித்துப் பாட்டிக்கு ஒத்தாசையாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்தார்.

அப்பொழுது மருங்காபுரியில் மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனி என்ற நாடகக் கம்பெனியார் நாடகமாடிக் கொண்டிருந்தார்கள். [இதே பெயருள்ள வேறொரு பிரபல கம்பெனியும் அந்த நாட்களில் நாடகமாடிக் கொண்டிருந்தது. ஆனால் மருங்காபுரியில் ஆடிக் கொண்டிருந்த இந்தக் கம்பெனி வேறு.]

அந்த நாடகக் கம்பெனியில் எம். எஸ். பாக்கியம் ஒரு சாதாரண உப நடிகையாகச் சேர்ந்தார். சம்பளம் என்ன என்று கேட்கிறீர்களோ? ரூ. 0-0-0! நாடகமேடை அனுபவமாவது பெறலாமே என்ற எண்ணத்துடன் யாதொரு சம்பளமுமின்றி அந்த நாடகக் கம்பெனியில் பாக்கியம் சேர்ந்தார்.

சுமார் ஒரு வருஷகாலம் அந்தக் கம்பெனி நாடகங்களில் பாக்கியம் நடித்தார். பிறகு அந்தக் கம்பெனி கோவிந்தா ஆகிவிட்டது. ஆகவே பாக்கியம் டி. பி. பொன்னுசாமி பிள்ளை என்பவர் நடத்தி வந்த மற்றொரு நாடகக் கம்பெனியில் சேர்ந்து ஒரு வருஷம் வேலை பார்த்தார். பின்னர் அந்தக் கம்பெனி என்னெஸ்கே நாடக சபாவுடன் இணைக்கப்பட்டது. பாக்கியமும் கம்பெனியை விட்டு விலகி கோட்டயம் பி. கைலாஸம் என்பவரிடம் கர்நாடக சங்கீதம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார்.

சுமார் ஒன்றரை வருஷகாலம் பாக்கியம் சங்கீதப் பயிற்சி பெற்றார். அந்த சமயத்தில் வைரம் ஸ்ரீ. அருணசலம் செட்டியார் காரைக்குடியில் தமது புதிய நாடகக் கம்பெனியை ஆரம்பித்தார். அந்தச் செய்தி கேட்டவுடன் பாக்கியம் சங்கீதப் பயிற்சியை நிறுத்திவிட்டு வைரம் நாடகக் கம்பெனியில் சேர்ந்தார். அவருக்கு ஆரம்பச் சம்பளம் மாதம் பத்து ரூபாய்! அதுவே மிகப் பெரிய சம்பளம் என்கிறார் பாக்கியம். வைரம் செட்டியாரின் கம்பெனியை விட்டு விலகும்போது பாக்கியம் மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார்.

வைரம் செட்டியாரின் நாடகங்களில் பாக்கியத்திற்கு நல்ல பெயரும் புகழும் கிடைத்தன. ஆனால் வேலைத் தொந்தரவும், மற்றும் சில்லறைத் தொந்தரவுகளும் மிக்வும் அதிகமா

யிருந்ததாம். கம்பெனியிலிருந்து நழுவுவதற்கு நல்ல சான்ஸை எதிர் பார்த்து பாக்கியம் காத்துக்கொண்டிருந்தார்.

வைரத்தின் "திருமழிசை ஆழ்வார்" நாடகத்தில் பாக்கியம் கனகாங்கியாவும் சீதா என்ற ஹாஸ்ய பாத்திரமாகவும் தோன்றி நடித்து வந்தார். நாடகத்திற்கு விஜயம் செய்தவர்கள் பாக்கியத்தின் நடிப்பைப் பெரிதும் புகழ்ந்து வந்தார்கள்.

"திருமழிசை ஆழ்வார்"தான் பாக்கியத்திற்கு பாக்கியத்தைத்தேடிக் கொடுத்தார் என்றால் மிகையாகாது. "திருமழிசை ஆழ்வார்" நாடகத்தைப் பார்த்து ரஸித்தவர்களில் ஜூபிடர் பிக்சர்ஸ் முதலாளியும் ஒருவர். பாக்கியத்தின் நடிப்பும், பேச்சும் அவரது கவனத்தைக் கவர்ந்தன. ஓசைப்படாமல் பாக்கியத்தை மூன்று வருஷங்களுக்கு ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டார்! பாக்கியத்திற்கும் அதிர்ஷ்டம் ஆரம்பித்தது.

எம். எஸ். பாக்கியம் முதல் முதலாக நடித்த படம் ஜூபிடரின் "வித்தியாபதி". அதில் நாராயண பாகவதரின் மனைவியாக அவர் நடித்தார். ஆனால் ஜூபிடரின் "ராஜகுமாரி"யில் தான் பாக்கியத்திற்கு நல்ல புகழ் கிடைத்தது. "ராஜகுமாரி"யில் பகுணியாகத் தோன்றிய பாக்கியத்தின் நடிப்பை படரஸிகர்கள் ஒரு முகமாகப் பாராட்டினார்கள். 'வெடுக் வெடுக்' கென்று பேசி விருவிருப்புடன் நடித்திருக்கிறார் பாக்கியம்.

அதன் பின்னர் ஜூபிடர் "கஞ்சனி"ல் ஒரு முக்கிய பாகத்தில் தோன்றினார். இந்தப்படமும் சுமாரான வெற்றியைப் பெற்றது. "அபிமன்யு"விலும் அவருக்கு ஒரு பாத்திரம் கொடுக்கப்பட்டது.

இப்பொழுது பாக்கியம் "விஜயகுமாரி;" "மோகினி," "கிருஷ்ண விஜயம்" ஆகிய ஜூபிடர் படங்களில் நடித்து வருகிறார்.

புத்தகங்கள் பத்திரிகைகள் படிப்பதில் பாக்கியத்திற்கு மிகுந்த ஆவல் உண்டு. அவருக்குத் தமிழைத் தவிர ஹிந்தியும், ஆங்கிலமும் சுமாராகத் தெரியும். இப்பொழுது தவறாமல் ஹிந்தி படித்து வருகிறார்.

சங்கீதப் பயிற்சியையும் பாக்கியம் விட்டுவிட வில்லை. கோட்டயம் பி. கைலாஸம் என்பவரிடம் சங்கீதப் பயிற்சி பெற்று வருகிறார்.

பாக்கியம் தைரியமும் உறுதியும் இயற்கையிலேயே படைத்தவர். 'ராஜகுமாரி" படத்தில் மாயக் கம்பளம், மாயமோதிரம் முதலியவை வைக்கப்பட்டிருந்த ரகசிய அறைக்குள் இவர் குதிக்கும் காட்சி வருகிறதல்லவா? அந்தக்காட்சி படப்பிடிப்பின் போது பாக்கியம் குதித்ததில் காலில் பலமாக அடிபட்டு விட்டது. அதே போல, அவரது குடிசைக்குத் தீ வைக்கப்படும் காட்சியில் உண்மையாகவே அவர் மீது நெருப் புப்பட்டு தேகத்தின் பல பாகங்கள் புண்ணாகி விட்டனவாம். ஆனால் அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல் ஷூட்டிங் முடியும்வரை தொடர்ந்து நடித்தாராம்.

1929-ம் வருஷம் பிறந்த பாக்கியத்திற்கு இன்னும் விவாக பாக்கியம் கிட்டவில்லை. "சமீபத்தில் விவாகம் செய்து கொள்ளும் எண்ணமும் இல்லை," என்று அவர் கூறுகிறார். நடிப்பில் ஆர்வம் கொண்ட பாக்கியம் நன்றாக நடித்து ரஸிகர்களிடையே பெரும் புகழ் சம்பாதிக்க வேண்டுமென்ற ஒரே லட்சியத்தையே வாழ்க்கை லட்சியமாகக் கொண்டிருக்கிறார்.

தோற்றத்தில் கிட்டத்தட்ட டி. ஏ. மதுரத்தைப் போலிருக்கும் பாக்கியம் 'பகுணி' போன்ற பாத்திரங்களில் தொடர்ந்து சிரத்தையுடனும் உழைப்புடனும் நடித்து வந்தால் தமிழ் நாட்டில் டி. ஏ. மதுரம் சம்பாதித்த கீர்த்தியை அவராலும் பெற முடியும் என்று நான் கருதுகிறேன். உங்கள் அபிப் பிராயம் என்ன?

# திருச்சூர் பிரேமாவதி

தமிழ்ப் படஉலகில் சில நக்ஷத்திரங்கள் நாடக மேடை அனுபவத்தின் உதவியுடன் நுழைந்தார்கள். எம். எஸ். சுப்புலக்ஷ்மி, என். வி. வசந்தகோகிலம் போன்ற சிலர் தங்களது அபார சங்கீத ஞானத்தின் துணையால் நக்ஷத்திரப்பதவி பெற்றிருக்கிறார்கள். இன்னும் சிலர் பரதநாட்டியக் கலையில் தேர்ச்சி பெற்று அதன் துணையால் படஉலகில் நுழைந்து புகழ் பெற்றார்கள். இவ்வாறு ஆடிக்கொண்டே திரை உலகில் நக்ஷத்திரமாக ஜ்வலிக்கும் ஒரு சிலரில் திருச்சூர் பிரேமாவதியும் ஒருவர்.

பிரேமாவதி பிறந்த ஊர் தான் திருச்சூரே தவிர அவர் தமிழர்தான். 'நீங்கள் என்ன, மலையாள ஜாதியைச் சேர்ந்தவர்களா?' என்று நான் கேட்டதும், "இல்லை, இல்லை. நாங்களும் தமிழர்கள்தான்," என்று கர்வத்துடன் பதிலளித்தார் பிரேமாவதி.

பிரேமாவதியின் முன்னோர்கள் பல வருஷங்களுக்கு முன்பே தமிழ் நாட்டிலிருந்து திருச்சூரில் குடியேறினார்கள். அவர்கள் ஸ்வீகாரம் செய்து கொண்டது கேரள ராஜ்யமே தவிர அவர்களது உடலில் ஓடும் இரத்தம் தமிழ் இரத்தம் தான்!

பிரேமாவதி 1926ம் வருஷம் திருச்சூரில் ஒரு அந்தஸ்துள்ள உயர்குடும்பத்தில் பிறந்தார். பிராமண அய்யர் ஜாதியைச் சேர்ந்தவர். அவரது தகப்பனார் திருச்சூர் ஹைஸ்கூல் ஒன்றில் தலைமை உபாத்தியாயராக இருந்து வந்தார்.

பிரேமாவதியுடன் பிறந்த சகோதரிகள் மூன்று பேர். பிரேமாவதிதான் கடைக்குட்டி. அவரது தகப்பனார் அவரை அபார வாஞ்சையுடன் சீராட்டி வளர்த்து வந்ததில் ஆச்சரியமில்லையல்லவா?

ஆனால் தகப்பனாரின் அன்பையும், ஆதரவையும் பிரேமாவதி சிறு வயதிலேயே இழந்துவிட்டது வருந்தத்தக்கது.

அவர் எட்டு வயதுச் சிறுமியாயிருந்தபொழுதே அவரது தகப்பனார் இறந்து விட்டார்.

அப்பொழுது பிரேமாவதியின் தமக்கை புருஷன் சென்னை ஹார்பரில் வேலை பார்த்து வந்தார். தகப்பனாரை இழந்த பிரேமாவதி சென்னைக்கு வந்து தமது தமக்கையுடன் வசிக்கலானார்.

இயற்கையிலேயே சங்கீதத்தில் அபிருசியும், இனிய சாரீரமும் வாய்ந்திருந்த அவருக்கு சங்கீதத்தில் ஆசை விழுந்தது. சங்கீத வித்வான்கள் சிவராஜ அய்யர், குன்னக்குடி வெங்கடராமய்யர் ஆகியோரிடம் முறைப்படி கர்நாடக சங்கீதம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார்.

கர்நாடக சங்கீதத்தில் சுமாரான தேர்ச்சி யடைந்ததும் ஹரிகதா காலக்ஷேபங்கள் செய்ய வேண்டுமென்ற ஆசை பிரேமாவதியின் மனதில் தோன்றிற்று. அதற்காக வேண்டிய பயிற்சியையும் பெற்றுத் தமது பதினேழுவது வயதில் முதன் முதலாக ஹரிகதா காலக்ஷேபங்கள் செய்ய ஆரம்பித்தார். ரசிகர்கள் பிரேமாவதியின் ஹரிகதா காலக்ஷேபங்களைப் பெரிதும் ரசித்து வந்தார்கள்.

ஹரிகதா காலக்ஷேபங்களில் புதிய டெக்னிக்குகளைப் புகுத்த வேண்டுமென்று பிரேமாவதி தீர்மானித்தார். கதா காலக்ஷேபங்களின் நடுவிலேயே பொருத்தமான இடங்களில் பரத நாட்டியமும் ஆடிக்காட்டினால் ரசிகர்கள் அதை மிகவும் விரும்புவார்கள் என்று அவர் மனதில் பட்டது. உடனே மயிலாப்பூர் கௌரி அம்மாள் என்ற ஆசிரியையிடம் பரத நாட்டியம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார்.

பரத நாட்டியத்திற்கேற்ற கவர்ச்சிகரமான அங்க அமைப்புகளும் அபினயம் பிடிக்கும் திறமையும் பிரேமாவதியிடம் பரிபூரணமாய் அமைந்திருப்பதைப் பார்த்த கௌரி அம்மாள் பரத நாட்டியத்தையே தொடர்ந்து அப்பியசித்து நாட்டியக் கச்சேரிகள் செய்யும்படி பிரேமாவதிக்கு யோசனை கூறினார். குருவின் ஆக்ஞையைத் தட்டமுடியுமா? பிரேமாவதியும் பரத நாட்டியக் கலையை ஒரு கை பார்த்தே தீருவது என்ற தீர்மானத்துடன் கண்ணப்ப முதலியார் என்ற ஆசிரியரிடம் நாட்டியக்கலையை விஸ்தாரமாகக் கற்க ஆரம்பித்தார்.

ஒருவாறு பரத நாட்டியத்தில் தேர்ச்சி பெற்றதும் நாட்டியக் கச்சேரிகள் செய்து ரசிகர்களை மகிழ்விக்கலானார் பிரேமாவதி. கலாரசிகர்கள் பிரேமாவதியின் பரத நாட்டியத்தை ஒரு முகமாகப் புகழ்ந்து ஆசீர்வதித்தார்கள். பிரேமாவதியும் தமிழ் நாடெங்கும் திக்விஜயம் செய்து தமிழ்நாட்டின் பிரதான நகரங்களிலெல்லாம் தமது நாட்டியக்கலையை அரங்கேற்றினார்.

ஆடரங்கத்தில் நாட்டியமாடும் நாரீமணி படமுதலாளிகளின் திருஷ்டியிலிருந்து தப்பமுடியுமா என்ன? ஒரு படமுதலாளியின் கடாக்ஷம் பிரேமாவதியின் மீதும் விழுந்தது. கட்டுவாய்ந்த உடலமைப்பும், சினிமாவுக்கேற்ற முகவெட்டும், சங்கீத நாட்டியக்கலைகளில் ஞானமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற பிரேமாவதியைத் தமது "விப்ர நாராயண"வில் நடிக்கச் செய்தார். இதே 'விப்ர நாராயண'வில் தான் பிரசித்தி பெற்ற ஆந்திர நடிகை டி. சூர்யகுமாரியும் முதன் முதலில் தோன்றினார். அதற்குப் பிறகு அரோரா பிலிம்ஸாரின் 'சங்கராச்சாரியார்' படத்திலும் பிரேமாவதி நடித்தார்.

ஆனால் கல்கத்தா ஈஸ்ட் இந்தியா பிலிம்ஸ் தயாரித்த "மீனாக்ஷி கல்யாண"த்தில் தான் முதன் முதலாக பிரதம பாகத்தில் பிரேமாவதி நடித்தார். "மீனாக்ஷி கல்யாண"த்தில் பிரேமாவதி மீனாக்ஷியாகத் தோன்றி நடித்தார். இந்தப் படம் தமிழ் நாடெங்கும் நன்றாக ஓடி வெற்றி பெற்றது. இதில் எம். ஆர். கிருஷ்ணமூர்த்தி பிரேமாவதியுடன் நடித்தார்.

"மீனாக்ஷி கல்யாண"த்தின் வெற்றிக்குப் பின்னர் "இழந்த காத"லில் கதாநாயகி பத்மாவாக பிரேமாவதி தோன்றினார். அதன் பின்னர் ஜூபிடர் "முருக"னில் தேவயானையாகவும்" "வித்தியாபதி"யில் கதா நாயகியாகவும் பிரேமாவதி நடித்துப் புகழ் பெற்றார்.

தற்சமயம் பிரேமாவதி ஸ்டார் கம்பைன்ஸ் "சம்சார நௌகா" தமிழ்ப் படத்தில் பி. ஆர். பந்துலுவுடன் கதாநாயகி சரளாவாக நடித்திருக்கிறார். பிரேமாவதியின் அமரிக்கையான நடிப்பும், இனிய பாட்டும், ரஞ்சித நடனமும் 'சம்சார நௌகா'வில் அவருக்குப் பெரும் புகழை அள்ளிக்கொடுக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

இதைத் தவிர, ஜூபிடரின் "வேலைக்காரி"யில் கதா நாயகியாகவும், "கிருஷ்ண விஜய"த்தில் ராதாவாகவும் "திருமழிசை ஆழ்வா"ரில் பல்லவ பட்ட மகிஷியாகவும் நடித்து வருகிறார்.

தம்மை முன்னுக்குக் கொண்டு வந்தது பரத நாட்டியக் கலைதான் என்பதை பிரேமாவதி மறந்து விடவில்லை. இப்பொழுதும் தினந்தோறும் தொடர்ந்து பரத நாட்டியப் பயிற்சி பெற்று வருகிறார்.

மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுக்கொடுக்க வேண்டியதில்லை என்பார்கள். கேரள ராஜ்யத்தில் பிறந்த ஆண் பெண்களுக்கும் நீந்தக் கற்றுக்கொடுக்க வேண்டியதில்லை! பிரேமாவதிக்குத் தண்ணீரில் துளைந்து துளைந்து நீந்தி விளையாடுவதில் அபார உற்சாகம்.

மோட்டார்காரில் இங்குமங்கும் ஓடுவதிலும் பிரேமாவதிக்குப் பிரியமுண்டு. இவருக்கு நன்றாக மோட்டார் ஓட்டத்தெரியும்.

பிரேமாவதிக்கு மலையாளம், தமிழ் ஆகிய இரண்டு பாஷைகளும் நன்றாகத் தெரியும். ஆங்கிலத்திலும் சிறிது தேர்ச்சி பெற்றிருக்கிறார்.

பத்திரிகைகள், நாவல்கள் படிப்பதில் பிரேமாவதிக்கு அபார மோகம். ஓய்வு நேரங்களில் ஏதாவது ஒரு பத்திரிகையையோ, நாவலையோ படித்துக்கொண்டே இருப்பார்.

சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்து விட்ட பிரேமாவதிக்கு உடன் பிறந்த சகோதரர்கள் யாரும் கிடையாது. அவரது சகோதரிகள் மூவரும் அவருடனேயே வசித்துவருகின்றனர்.

பிரேமாவதிக்குச் சிறு வயதிலேயே விவாகமாகிவிட்டது. ஆனால் புத்திர பாக்கியம் தான் இன்னும் கிட்டவில்லை.

எல்லோருடனும் இனிய முறையில் பழகும் சுபாவம் பிரேமாவதியிடம் இயற்கையிலேயே அமைந்திருக்கிறது. கர்வம், படாடோபம், ஆடம்பரம், எதையும் அவரிடம் காண

முடியாது. எப்பொழுதும் மலர்ந்த புன் சிரிப்புடன் தோற்றமளிக்கிறார்.

சுமார் ஐந்தடி உயரமும், சிவந்த மேனியும், கவர்ச்சிகரமான உடலமைப்பும், நாட்டியக்கலையில் தேர்ச்சியும் வாய்ந்த பிரேமாவதிக்கு சங்கீத ஞானமும் இருப்பது பொன் மலருக்கு வாசனையும் சேர்ந்தது போல் பரிமளிக்கிறது. எதிர் காலத்தில் புகழுடன் பிரகாசிக்கப் போகும் முன்னணி நக்ஷத்திரங்களில் பிரேமாவதியும் ஒருவர் என்று தைரியமாகக் கூறலாம்.

# டி. சூர்யகுமாரி

ஒரு காலத்தில் நமது தமிழ்ப் பத்திரிகைகளில் ஒரு அர்த்த மற்ற விவாதம் நடந்து கொண்டிருந்தது. "குடும்பஸ்திரீகள் சினிமாவில் சேர்ந்து நடிக்கலாமா, கூடாதா?" என்ற பிரச்னையை ஆசிரியர்கள் கிளப்பிவிட்டுக்கொண்டு அதற்கு சாதகமாகவும், பாதகமாகவும் எழுதிக் குட்டை குழப்பிக்கொண்டிருந்தார்கள். 'குடும்பஸ்திரீகள்' என்பதற்கு நமது ஆசிரியர்கள் கொடுத்த பொருள் "உயர்ந்த அந்தஸ்துள்ள குடும்பத்தைச் சேர்ந்தபெண்கள்" என்பதேயாகும். பத்திரிகாசிரியர்கள் காரசாரமாகப் பேனுமுனையில் ஒருவரை யொருவர் தாக்கிவந்த அந்த நாட்களில் மிக மிக உயர்ந்த அந்தஸ்துள்ள குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் சினிமா உலகில் பிரவேசித்து நடித்துப் பாடிப் புகழ்பெற்று அந்தப் பத்திரிகாசிரியர்களின் வாதங்களெல்லாம் எவ்வளவு பயனற்றவை, அர்த்தமற்றவை என்பதை வெட்ட வெளிச்சமாக்கினர். அந்தப் புகழ்பெற்ற பெண்மணிதான் இன்று நக்ஷத்திரமணியாகத் திகழும் டி. சூர்யகுமாரி.

ஸ்ரீ. டி. பிரகாசம் பந்துலுகாருவைத் தெரியாதவர்கள் சென்னை மாகாணத்திலிருக்க முடியாது. சிறந்த தேசபக்தர்; பலமுறை சிறை சென்றவர்; 'ஸ்வராஜ்யா' பத்திரிகையைச் சிறப்புடன் நடத்தியவர்; ராஜாஜி மந்திரிசபையில் ரெவின்யூ மந்திரி பதவி வகித்தவர்; ஆகஸ்ட் தியாகி; பின்னர் சென்னை மாகாணப் பிரதம மந்திரியாகவே பதவி வகித்தவர். அவரது சகோதரர் புதல்விதான் டி. சூர்யகுமாரி.

சூர்யகுமாரி 1925-ம் வருஷம் ராஜமகேந்திரபுரத்தில் பிறந்தார். அவரது தந்தை ஸ்ரீ. ஸ்ரீராமுலு அதே ஊரில் பிரபல வக்கீலாக வேலை பார்த்து வந்தார். சூர்யகுமாரி ராஜமகேந்திரபுரத்தில் இரண்டாவது பாரம்வரை படித்தார். பள்ளிக்கூட நாட்களில் பாடுவதே அவரது பொழுது போக்காயிருந்தது. இனிய சாரீரத்தைப் பெற்றிருக்கும் அவரை அடிக்கடி பள்ளிக்கூடத்தில் பாடச்சொல்லிக் கேட்டு மகிழ்ந்தார்கள் அவரது உபாத்தியாயர்கள். வீட்டிலும் பாடிக்கொண்டே யிருப்பார்.

அவர் இரண்டாவது பாரத்தில் படித்துக்கொண்டிருந்த பொழுது ஒரு படமுதலாளி அவரது சங்கீத ஞானத்தைப் பற்றிக் கேள்விப்பட்டுத் தமது அடுத்தபடத்தில் சூர்யகுமாரியை நடிக்கும்படி கேட்டுக்கொண்டார். ஸ்ரீ. ஸ்ரீராமுலுவும் சம்மதிக்கவே சூர்யகுமாரி அந்தப்படத்தில் தோன்றி நடித்துப் பாடினார். அவர் முதன் முதல் தோன்றிய அந்தப்படம்தான் "விப்ர நாராயணா." அந்தப்படம் கோலாப்பூர் ஸ்டுடியோ ஒன்றில் தயாரிக்கப்பட்டது.

அந்தப்படத்தில் சூர்யகுமாரியின் பாடல்கள் ரசிகர்களுக்கு மிகவும் பிடித்திருந்தன. அந்த முதல் படத்தின் மூலமே நல்ல பாடகி என்று சூர்யகுமாரி பெயர் வாங்கி விட்டார். இவ்வளவுக்கும் முறைப்படி யாரிடமும் அவர் சங்கீத சிக்ஷைகூடச் சொல்லிக் கொள்ளவில்லை. சமீப வருஷங்களில்தான் கிரமமாக அவர் சங்கீதம் கற்றுக்கொண்டு வருகிறார் என்பதை இங்கே குறிப்பிடவேண்டும்.

'விப்ர நாராயணா' முடிந்ததும் மயூரா பில்ம்ஸாரின் "அதிர்ஷ்டம்" தமிழ்ப்படத்தில் நடித்தார். அதற்குப் பிறகு "தேவதா," "கிருஷ்ணப்ரேமா," "தீன பந்து," "பாக்ய லக்ஷ்மி," ஆகிய தெலுங்குப்படங்களிலும், "பிரேம பந்தன்" தமிழ்ப்படத்திலும் நடித்தார். இப்படங்களெல்லாம் சுமாரான வெற்றியைப் பெற்றன.

படங்களில் நடித்துக்கொண்டே ஓய்வு நேரங்களில் படிப்பிலும் கவனம் செலுத்தினார் சூர்யகுமாரி. தனது சொந்த முயற்சியுடன் வீட்டில் படித்து கேம்பிரிட்ஜ் ஸீனியர் பரீக்ஷையில் தேறினார்.

அதற்குப்பிறகு தமிழ்நாடு டாக்கீஸாரின் 'கடக'த்தில் கதாநாயகியாகத் தோன்றி நடித்தார். ஸ்டார் கம்பைன்ஸாரின் தமிழ் "சம்சார நௌகா"வில் அவரைக் காணலாம். தற்சமயம் "பாரதி" கன்னடப் படத்தில் நடித்து வருகிறார்.

சென்ற சில வருஷங்களாக அவர் முறைப்படி கர்நாடக சங்கீதமும், ஹிந்துஸ்தானி சங்கீதமும் கற்றுக் கொண்டு வருகிறார்.

தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், கன்னடம், ஹிந்தி ஆகிய ஐந்து பாஷைகளிலும் சூர்யகுமாரிக்கு நல்ல தேர்ச்சியுண்டு.

ஆனால் இவ்வளவு படித்திருந்தும், நக்ஷத்திரப்பதவி பெற்றுப் புகழடைந்திருந்தும், அவரிடம் கர்வம் சிறிதுகூட இல்லை. அவர் வயதுடைய மற்றப் பெண்களைப் போலவே வீட்டு வேலைகளைச் செய்து தருகிறார். ஆடம்பரம் சிறிது மில்லாமல் சாதாரணப் பெண்போலவே தோற்றமளிக்கிறார். ஷூட்டிங் இல்லாத நாட்களில் வீட்டில் சமையல் வேலைமுதல் எம்பிராய்டரி வேலை தையல் வேலை வரை எல்லாவற்றையும் சந்தோஷத்துடன் தானே செய்வதில் அவருக்கு ஒரு திருப்தி.

சூர்யகுமாரிக்கு மூன்று சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் இருக்கிறார்கள். மூத்த சகோதரர் ஸ்ரீ கோபால கிருஷ்ணராவ் நெருப்பணைக்கும் இலாகாவில் சென்னை ஜில்லா அதிகாரியாக இருக்கிறார். இரண்டாவது சகோதரர் ஸ்ரீ டி. ஏ. ராமராவ் டென்னிஸ் ஆடுவதில் நமது தேச முழுவதிலும் புகழ்பெற்றவர். மூன்றாவது சகோதரர் ஸ்ரீ. ராம் மோஹன் ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் நல்ல ஞானமுடையவர். பம்பாயைச்சேர்ந்த மனோஹர் பார்வே என்பவரது சிஷ்யராக அவர் இருந்து வருகிறார்.

அவரது இரு சகோதரிகளுக்கும் விவாகமாகிவிட்டது. குடும்ப வாழ்கையிலீடுபட்டிருக்கிறார்கள்.

சூர்யகுமாரிக்கு இன்னும் விவாக பாக்யம் கிட்டவில்லை. குமாரியாகவே இருந்து வருகிறார்!

தனது கலைத்திறமை மூலம் பிரஜா சேவை செய்வதையே அவர் தனது லட்சியமாகக் கொண்டிருக்கிறார்.

அவருக்கு மோட்டார் ஓட்டவும், சைகிள் விடவும் தெரியும். சமீபத்தில் ஒரு புதிய மோட்டார்காரும் வாங்கியிருக்கிறார். ஷூட்டிங் இல்லாத நாட்களில் மாலை நேரங்களில் கடற்கரைக்குச் சென்று உலாவிவர அவர் தயங்குவதில்லை. கடை கண்ணிக்குப் போகவேண்டுமென்றால் யார் தயவையும் அவர் எதிர் பார்ப்பதில்லை. தானே சென்று தனக்கு வேண்டியவற்றை வாங்கி வருவதில் அவருக்கு ஒரு அலாதி ஆனந்தம்.

கல்லூரி மாணவர்களின் வேண்டுகோளின் பேரில் பல காலேஜ்களுக்குச் சென்று கானமழை பொழிந்திருக்கிறார். சென்னை நகரில் அவர் பாடாத காலேஜ்களே கிடையாது எனலாம்.

பொது விஷயங்களுக்காகத் தன்னாலியன்ற உதவியைச் செய்ய அவர் எப்பொழுதும் பின் வாங்குவது கிடையாது. செஞ்சிலுவைச் சங்க உதவிநிதி, பஞ்ச நிவாரண நிதி, ஹைதராபாத் போராட்ட உதவி நிதி, முதலிய பல உதவி நிதிகளுக்காக சூர்யகுமாரி சங்கீதக் கச்சேரி செய்து உதவியிருக்கிறார்.

சமீபத்தில் மகாத்மா காந்தியடிகளின் மறைவுபற்றி அவர் பாடியிருக்கும் இரண்டு உருக்கமான பாடல்கள் ஸரஸ்வதி ஸ்டோர்ஸாரால் இசைத்தட்டுகளில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. "உண்மையை யெமக்கே உரைப்பவர் இனியார்?" "நிரந்தர ஜோதியில் கலந்தாயோ சுதந்தர பாரத பிதா" என்று ஆரம்பிக்கும் இந்த இருபாடல்களும் நம்மை உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்துகின்றன. மகாத்மாவின் மறைவினால் மக்கள் மனதில் உண்டாயிருக்கும் எல்லையற்ற துக்கத்தை சூர்யகுமாரி உணர்ச்சியுடன் பாடி வெளியிட்டிருக்கிறார்.

சுய விளம்பரத்தில் சூர்யகுமாரிக்குச் சிறிதும் இஷ்டமில்லை. மிக சிரமப்பட்டுத்தான் அவரது வாழ்க்கை வரலாறுகளை அவரிடமிருந்து கிரகிக்க முடிந்தது.

பட முதலாளிகளுக்கு சூர்யகுமாரியிடம் தனி மதிப்பு உண்டு. யார் தவறினாலும் குறித்த நேரத்தில் செட்டில் தோன்ற சூர்யகுமாரி தவறுவதில்லை. தான் செய்யும் ஒவ்வொரு வேலையையும் முழுமனதுடன் செவ்வனே செய்து முடிப்பதுதான் அவரது லட்சியம். உண்மையான உழைப்பைப் போன்ற சிறந்த செல்வம் வேறு எதுவுமில்லை என்கிறார் சூர்யகுமாரி.

தனக்குக் கிடைத்திருக்கும் புகழுக்குத்தான் அருகதையல்லவென்றும், நமது தேச ஜனங்களின் நல்லகுணத்தினாலேயே அவர்கள் தன்னைப் புகழ்வதாகவும் கருதுகிறார் தன்னடக்கம் நிரம்பிய சூர்யகுமாரி. "அவர்களது நல்ல அபிப்பிராயத்திற்குத் தகுதி வாய்ந்தவளாக நான் விளங்கவேண்டும் என்பதே எனது லட்சியம். அதற்காகத்தான் உழைத்து வருகிறேன்," என்கிறார் அவர்.

'அந்த லட்சியத்துடன் உழைத்துவரும் வரையில் உங்களுக்கு வெற்றி நிச்சயம்," என்றேன் நான்.

# ராஜபாலா ரஜனி

தமிழ்ப்பட உலகில் புகழுடன் திகழும் நடிகைகளைத் திரையில் பார்க்கும்பொழுது பிரமாதமான அழகுடன் 'டால்' வீசுவார்கள். ஆனால் அவர்களை நேரில் பார்த்துவிட்டாலோ, "பூ, இவ்வளவுதானா!" என்ற அலட்சிய உணர்ச்சிதான் நம் மனதில் தோன்றும். படத்தில் தோன்றுவதைப் போலவே நேரில் பார்த்தாலும் அழகுடன் திகழும் நடிகைகள் நமது தமிழ்ப்பட உலகிலேயே மிகச் சிலர்தான். இந்த மிகச் சிலரில் ராஜபாலா ரஜனியும் ஒருவர்.

எலுமிச்சம் பழத்தை நிகர்த்த நிறம்; கருத்து நீண்டு வளர்ந்து சுருண்டு தொங்கும் கேசபாரம்; கட்டுமஸ்தான தேகம்; இளமையின் பூரிப்புத் தாண்டவமாடும் அங்க அமைப்பு; புன்முறுவல் பூத்த முகமண்டலம்; ஒரு பாவமுமறியாத சாதுபோல் அகன்று பரந்து மருண்டு விழிக்கும் கயற்கண்கள்—இவை யனைத்தும் சேர்ந்துதான் ரஜனியை நக்ஷத்திரப் பதவிக்கு உயர்த்தி யிருக்கின்றன.

ரஜனியின் சொந்தப் பெயர் ராஜபாலா. 1928ம் வருஷம் பிப்ரவரி மாதம் புதுக்கோட்டையில் ரஜனி பிறந்தார். நாயுடு ஜாதியைச் சேர்ந்த அவரது தகப்பனார் புதுக்கோட்டை சமஸ்தான அச்சுக்கூடத்தில் உத்தியோகம் பார்த்துவந்தார். உத்தியோகத்திலிருந்து 'ரிடையர்' ஆகிப் பென்ஷன் வாங்க ஆரம்பித்ததும் அவருக்குப் புதுக்கோட்டையில் இருப்புக் கொள்ளவில்லை. குடும்ப சகிதமாகச் சென்னைக்கு வந்து குடியேறினார். அப்பொழுது ரஜனிக்கு வயது ஒன்பதேதான்.

சென்னைக்கு வந்து சேர்ந்த ரஜனி எழும்பூரில் ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தார். ரஜனி பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும்பொழுது "பக்த அருணகிரி" படத்தில் நடிப்பதற்காகச் சில சிறுமிகள் பொறுக்கப் பட்டார்கள். அவர்களில் ரஜனியும் ஒருவர். "பக்த அருணகிரி"யில் மிகச் சிறிய பாகம்தான் ரஜனிக்குக் கொடுக்கப்பட்டது. அருணகிரியின் சகோதரியாக ரஜனி

நடித்தார். அதில் நடித்தது ரஜனியின் வாழ்க்கையையே மாற்றி யமைத்துவிட்டது. அந்தப் படத்தில் தோன்றியது முதல் தானும் ஒரு நாள் பிரபல சினிமா நடிகையாகத் திகழ வேண்டும் என்ற ஆவல் அவர் மனதில் வேரூன்றிவிட்டது. ஆவல் இருந்தால்மட்டும் போதுமா? விடா முயற்சியுடன், சலியாது உழைத்து நக்ஷத்திரப் பதவியைக் கைப்பற்றிவிட்டாரே, அதைச் சொல்லுங்கள்!

"பக்த அருணகிரி"க்குப் பிறகு "கிருஷ்ண குமா"ரில் சந்திராவாக நடித்தார் ரஜனி. இதில் அவரது நடிப்பு ரசிகர்களின் கவனத்தைக் கவர்ந்தது. அதன் பின்னர் "பால நாகம்மா", "மஹா மாயா", "விஸ்வாமித்ரா", "செஞ்சு லக்ஷ்மி", "மாயா லோகம்" முதலிய படங்களில் ரஜனி நடனமாடியிருக்கிறார். "பளநாடு யுத்தம்", "மாயா லோகம்" ஆகிய தெலுங்குப் படங்களிலும், "வால்மீகி" ஹிந்திப் படத்திலும் கூட ரஜனி நாட்டியமாடியிருக்கிறார்.

1943ம் வருஷம் ஆகஸ்ட் மாதத்தில் ரஜனி நாயுடு வகுப்பைச் சேர்ந்த ஸ்ரீ ராமச்சந்திரன் என்பவரை விவாகம் செய்து கொண்டார். அவர்களுக்கு கலியாணமான சங்கதியே ஒரு பெரிய கதைதான்! கேட்கிறீர்களா?

சென்ற மகா யுத்தத்தில் நமது வீரத் துருப்புகளுக்கு உற்சாக மூட்டுவதற்காகக் 'காண்டீன்'கள் நடத்துவது, சங்கீதக் கச்சேரிகள், நடனக் கச்சேரிகள் நடத்த ஏற்பாடு செய்வது, இத்தியாதி சேவைகளில் ஸ்ரீ ராமச்சந்திரன் ஈடுபட்டு உழைத்துவந்தார். ஸ்ரீ ராமச்சந்திரன் ஏற்பாடு செய்து நடத்திய சில நடனக் கச்சேரிகளில் ரஜனியும் பங்கெடுத்துக் கொள்வது வழக்கம். ராமச்சந்திரன் முதன் முதலில் ரஜனியைச் சந்தித்தது 1942ம் வருஷத்தில். கண்டதும் காதல் என்பார்களே அது அவர்கள் விஷயத்தில் உண்மையாயிற்று. இளம் வயதுடன் மன்மதனது பாணங்களும் சேர்ந்தால் கேட்கவா வேண்டும்! ராமச்சந்திரனும் ரஜனியும் ஒருவர்மீது ஒருவர் காதல் கொண்டனர். இவர்களது காதல் வளர்ந்து கொண்டே வந்தது. கடைசியில் 1943ம் வருஷம் ஆகஸ்ட் மாதத்தில் இந்த இளம் காதலர்களுக்குத் திருமணமும் நடந்தேறியது.

சில காதலர்கள் விஷயத்தில் விவாகமானவுடன் அவர்களது காதலும் வரண்டுபோகும். ஆனால் இவர்கள் காதல் அந்த ரகத்தைச் சேர்ந்ததல்ல. விவாகமான பின்னரும் அவர்களது காதல் வளர்ந்து கொண்டுதான் போகிறதே தவிரக் குறைவதாகக் காணோம்! இன்றைக்கும் ரஜனியும் ராமச்சந்திரனும் சங்கோஜத்துடன் பேசிச் சிரிப்பதைப் பார்க்கும்பொழுது அவர்களது காதல் சிரஞ்சீவிக் காதல் என்பது தெரியவரும்!

ரஜனியை விவாகம் செய்து கொண்டதும் ராமச்சந்திரனுக்கு நடன கலையின்மீது அபார மோகம் விழுந்துவிட்டது. மனைவியின் கலை ஆர்வம் கணவனையும் பற்றிக் கொண்டதில் என்ன ஆச்சரியம் என்கிறீர்களோ? அதுவும் சரிதான்! புகழ்பெற்ற ஸ்ரீ ஜி. கே. சேஷகிரியின் ரினேஸான்ஸ் தியேட்டரில் ராமச்சந்திரனும் நடனம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார்.

முத்துசாமி நட்டுவனார், மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை ஆகிய ஆசிரியர்களிடம் ரஜனி பரதநாட்டியம் கற்றுக்கொண்டார். பரத நாட்டியத்தைத் தவிர, மணிபுரி, கதகளி, கதக் நடனங்களையும் கற்று தேர்ச்சி பெற்றார். நாட்டியக் கலைமீது அவர் கொண்டிருந்த ஆர்வம் இன்றளவும் குறையாது வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இப்பொழுது கூட தினந்தோறும் ஒரு மணி நேரம் தமது வீட்டில் ரஜனி நாட்டியமாடத் தவறுவதில்லை. இதன்மூலம் நாட்டியக் கலையில் தேர்ச்சி ஏற்படுவதுடன் உடல் நலத்திற்கும் யாதொரு கெடுதலும் வராமல் ஆரோக்கியமாக வாழ முடிகிறது என்று ரஜனி கூறுகிறார்.

கணவனும் மனைவியும் நாட்டியத்தில் தேர்ச்சி பெற்றுவிட்டால் சும்மா இருக்க முடியுமா? தங்களது கலைத்திறனை வெளியுலகிற்கும் காண்பிக்க வேண்டும் என்ற ஆவல் ஏற்படுவது இயற்கைதானே? ராமச்சந்திரனும் ரஜனியும் வடநாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்து நடனமாட ஆரம்பித்தார்கள். வடநாட்டு நாட்டிய ரசிகர்கள் இந்த இளம் தம்பதிகளின் நடனத்தைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்தார்களாம்.

நாட்டியக் கலையில் தேர்ச்சி பெறுவதுடன் ரஜனி திருப்தியடையவில்லை. கர்நாடக சங்கீதத்தையும் ஒரு கை பார்க்க ஆரம்பித்தார். மாயவரம் விச்வநாத அய்யர் என்ற வித்வான் ரஜனிக்குச் சங்கீத சிக்ஷை சொல்லிக் கொடுத்து வருகிறார்.

வடநாட்டு ஹிந்துஸ்தானி சங்கீதத்தின் மீது ரஜனிக்கு அபார மோகம். அவர் வீட்டுக்கு எப்பொழுது சென்றாலும் ஹிந்திப் பாட்டுக்களின் இன்னிசையைத் தவறாது கேட்கலாம். ஹிந்துஸ்தானி மெட்டுக்களில் அழகாகப் பாடும் சக்தியும் ரஜனிக்கு இருக்கிறது.

பல படங்களில் உபபாத்திரமாக நடித்த பிறகு முதன் முதலாக ராமானந்தா பிக்சர்ஸார் தங்களது "மதனமாலா"வில் அவருக்குத் துணிந்து பிரதம பாகத்தையே கொடுத்தார்கள். "மதன மாலா"வில் மாலாவாகத் தோன்றினார் ரஜனி. அவர் பிரதமபாகம் ஏற்று நடித்த முதல் படம் அது என்பதைப் பார்க்கும்பொழுது "மதனமாலா"வில் அவர் பெருத்த வெற்றியடைந்து விட்டார் என்றே கூறவேண்டும்.

தற்சமயம் ப்ரகதி 'ஏ-1' படத்தில் நகர கதாநாயகியாகவும் "மாளவிகா"வில் இராவதியாகவும் மாடர்ன் தியேட்டர் ஸாரின் "ஆதித்தன் கனா"வில் அங்கயற்கண்ணியாகவும் ரஜனி நடித்து வருகிறார்.

ரஜனிக்கு ஒரே ஒரு பெண் குழந்தை இருக்கிறது. குறுகுறுப்புடன் ஓடியாடி விளையாடும் இந்த பேபி நளினி 1944ம் வருஷத்தில் பிறந்தாள். ரஜனி இந்தக் குழந்தை மீது தமது உயிரையே வைத்திருக்கிறார் என்று கூறலாம்.

ரஜனியுடன் பிறந்த சகோதரர்கள் கிடையாது. ஒரே ஒரு சகோதரிமட்டும் இருக்கிறார்; பெயர் ராணிபாலா. ராணி பாலாவும் திரை உலகில்தான் ஈடுபட்டிருக்கிறார். உதய சங்கரின் "கல்பனா" ஹிந்திப் படத்தில் ராணிபாலா நடித்திருக்கிறார். தற்போது ராணிபாலா "துரோகி" என்ற தெலுங்குப் படத்தில் நடனமாடி வருகிறார்.

ரஜனியின் தாயும் தந்தையும் இன்னும் உயிருடன் இருக்

கிறார்கள். தங்களது புதல்வி ராணிபாலாவுடன் எழும்பூரில் அவர்கள் வசித்துவருகிறார்கள்.

மகாத்மா காந்திஜி மீது ரஜனி அபார பக்தி கொண்டவர். மகாத்மாஜி சுட்டுக் கொல்லப்பட்ட செய்தி கேட்டதும் நாமெல்லோரும் துடிதுடித்தது போலவே ரஜனியும் துடிதுடித்து உருகிப் போய்விட்டாராம். மகாத்மாஜியின் அஸ்திகள் சர்க்கார் விடுதியில் வைக்கப் பட்டிருந்தபொழுது ரஜனியும் அவைகளை தரிசித்து மாலையிட்டு வணங்கினார். காந்தியடிகளின் அஸ்திகள் சென்னை கடற்கரையில் கரைக்கப்பட்டபொழுது அண்ணலுக்கு அஞ்சலி செய்ய கடற்கரையில் கூடியிருந்த லக்ஷக்கணக்கான மக்களில் ரஜனியும் ஒருவர். "மகாத்மாஜி மறைந்த செய்தி கேட்டது முதல் எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை", என்று என்னிடம் அங்கலாய்த்தார் அவர்.

ரஜனியை வீட்டில் பார்த்தால் இவர் புகழ்பெற்ற நக்ஷத்திரம் என்ற எண்ணமே நமக்குத் தோன்றாது. சினிமா நக்ஷத்திரம் என்று புகழ் பெறுவதை விட லட்சிய ஹிந்து மனைவி என்று புகழப்படுவதையே அவர் விரும்புகிறார். வீட்டு வேலைகளை ஆர்வத்துடன் செய்வதில் அவருக்கு அளவிறந்த சந்தோஷம் உண்டாகிறதாம். அவரது வீட்டினுள் சென்றால் எல்லாப் பொருள்களும் கன கச்சிதமாகத் தோற்றமளிக்கும். கண்ணாடி போன்ற தூய்மை வீடெங்கும் மணக்கும். வீட்டை சுத்தமாக வைத்துக் கொள்வதிலும், தனது அருமைக் குழந்தை பேபி நளினியைச் சீராட்டி வளர்ப்பதிலும் ரஜனி பெருத்த இன்பத்தைக் காண்கிறார்.

வர்ணசித்திரங்கள் வரைவதில் ரஜனிக்கு அபார பிரீதி. நிட்டிங், பின்னல் வேலைகள், பூ வேலைகள் முதலியவை செய்வதும் அவருக்கு இஷ்டம்.

பத்திரிகைகள் என்றால் ரஜனிக்கு உயிர். தமிழ்ப் பத்திரிகைகளில் அவர் படிக்காத பத்திரிகை கிடையாது. ஓய்வு நேரங்களை புஸ்தகங்கள், பத்திரிகைகள் படிப்பதில் அவர் செலவிடுகிறார்.

மேல்நாட்டு, வடநாட்டு நக்ஷத்திரங்களின் கையெ

முத்துக்களை (autographs) ரஜனி சேகரித்து வருகிருர். அதில் அவருக்கு ஒரு அலாதி ஆனந்தம்!

சென்னை நகரில் காட்டப்படும் ஆங்கிலப் படங்களையும், ஹிந்திப் படங்களையும் ரஜனி தவருது பார்த்து வருகிருர். தாம் பார்க்கும் படங்களிலுள்ள நல்ல அம்சங்களைக் கிரகித்துக்கொள்வதில் அவருக்கு விசேஷ ஊக்கமிருக்கிறது.

எதைப் பார்த்தாலும் தானும் அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆவல் ரஜனியிடம் ஊறியிருக்கிறது. 'மேக் அப்' போடுவதைப் பார்த்துப் பார்த்துத் தமக்குத் தாமே 'மேக் அப்' செய்துகொள்ளும் திறமையை ரஜனி அடைந்திருக்கிருர் என்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இப்பொழுதே ரஜனிக்கு ஏராளமான 'விசிறி'கள் இருக்கிருர்கள். ரயில்வே ஸ்டேஷன் முதலிய பொது இடங்களில் அவரைப் பார்க்க நேரிட்டால் "இதோ ரஜனி!" "ரஜனியேதான்!" என்று அவரது விசிறிகள் ஆரவாரிக்கிருர்களாம்! நக்ஷத்திரப் பதவி வேண்டுமென்ருல் அதிலிருக்கும் சில்லறைத் தொந்தரவுகளைப் பொருட்படுத்தினல் முடியுமா, என்ன?

ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையையே ரஜனி விரும்புகிருர். தமது உபயோகத்திற்காக ஒரு பழைய 1930-ம் வருஷத்து 'போர்ட்' காரைத்தான் வாங்கியிருக்கிருர் என்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இயற்கைக் காட்சிகளைக் கண்டு மெய்ம்மறந்து ஆனந்திக்கும் மனப்பண்புடைய ரஜனி தற்போது ராயபுரம் கடற்கரையோரமாக அழகிய பங்களா ஒன்றை சொந்தத்தில் நிர்மாணித்து வருகிருர். "ஸாகர தர்சனம்" (Sea view) என்ற பெயருடன் உருவாகி வரும் இந்த பங்களாவில் ரஜனி நீந்தி விளையாட ஒரு குளமும் இருக்குமாம்.

ஸ்டுடியோக்களில் நிலவும் போட்டி, பொருமைகளினுலேயே பல படங்கள் குட்டிச் சுவராகின்றன என்பது ரஜனியின் அபிப்பிராயம். "காமராமேன், ஸெளண்ட் எஞ்ஜினியர், டைரக்டர், ஆர்ட் டைரக்டர், சங்கீத டைரக்டர்கள், நக்ஷத்

திரங்கள், உப நடிக நடிகைகள் எல்லோரும் படத்தின் வெற்றி ஒன்றையே கருதி ஒத்துழைத்தால்தான் எந்தப் படமும் வெற்றி பெற முடியும்,'' என்று அழுத்தம் திருத்தமாக அவர் கூறுவதை உங்களால் மறுக்க முடியுமா?

கவர்ச்சிகரமான சரீர அங்க அமைப்பும், சினிமாவுக்கேற்ற முகவெட்டும் வாய்ந்த ரஜனி நடிப்பில் இன்னும் அதிக கவனம் செலுத்தினால் தமிழ் மக்களின் அபிமான நக்ஷத்திரங்களில் ஒருவராக ஜ்வலிப்பார் என்று உறுதியுடன் கூறலாம்.

# லலிதா - பத்மினி

சென்ற வருஷம் அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகா நாடு சென்னை நகரில் நடந்தது. தேவதாஸ் காந்தி, எஸ். ஏ. பிரெல்வி, துஷார் காந்தி கோஷ் முதலிய பிரசித்தி பெற்ற வட இந்தியப் பத்திரிகாசிரியர்களும் 'ஹிந்து' ஸ்ரீனிவாஸன் முதலிய தென்னிந்தியப் பத்திரிகாசிரியர்களும் மகாநாட்டில் பத்திரிகைத் தொழில் பற்றி கார சாரமாக விவாதித்தார்கள்; தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள்.

தேசத்தின் நாலு பக்கங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்த தேக சிரமத்துடன் பத்திரிகாசிரியர்களின் மூளைக்கும் நல்ல வேலை ஏற்பட்டு விட்டது. அத்துடன் நமது சென்னை நகரத்தின் புகழ்பெற்ற கோடைகால உஷ்ணம் வேறு சேர்ந்து கொண்டது!

" இவ்வளவு தொல்லைகளில் பாவம், பத்திரிகாசிரியர்கள் தவித்துப் போய்விட்டார்களே. கொஞ்சம் சிரம பரிகாரமாவது செய்து கொள்ளட்டும்!" என்ற ரீதியில் வரவேற்புக் கமிட்டியினர் ஒரு நடன விருந்து அளிக்க ஏற்பாடு செய்தார்கள். "ராஜாஜி ஹால்" என்று தற்போது குறிப்பிடப்படும் சென்னை அரசாங்க விருந்து மண்டபத்தில் அகில இந்தியப் பத்திரிகாசிரியர்கள் முன்னிலையில் மூன்று இளம் சிறுமிகள் நடனமாடினார்கள்.

சிறுமிகளின் நடனத்தைப் பார்த்ததும் பத்திரிகாசிரியர்களின் அலுப்பும் தேகசிரமமும் மூளைக்கொதிப்பும் பறந்தோடி விட்டன.

" பிரமாதம்!"

" இதுவரை இது போன்ற நடனத்தை நான் பார்த்ததேயில்லை."

" கலையின் சிகரமென்றால் இதுதான்! பலே ஜோர் போங்கள்!"

" என்ன நளினம்! பிறவிக் கலைஞர்களையா இவர்கள்!"

இப்படியெல்லாம் பாராட்டு மொழிகளை உதிர்த்துக் கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்து நடனத்தைக் கவனிக்க ஆரம்பித்தார்கள் இந்தியாவின் பிரபல பத்திரிகாசிரியர்கள்.

பொது ஜனங்களிடமிருந்து பாராட்டுதல்களைப் பெறுவதாவது எளிது என்று கூறலாம். ஆனால் இந்தப் பத்திரிகாசிரியர்கள் பொல்லாத பேர்வழிகள். உபாத்தியாயர்கள் மாணவனுக்கு மார்க் கொடுக்க மூக்கால் அழுகிறார்கள் அல்லவா? இந்தப் பத்திரிகாசிரியர்களும் அப்படித்தான். கலைஞர்களை லேசில் புகழமாட்டார்கள். அப்படியிருக்க, அகில இந்தியப் பத்திரிகாசிரியர்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைப் பெறுவதென்றால் சாதாரண விஷயமா?

பத்திரிகாசிரியர்கள் முன் அநாயாஸமாக நடனமாடி அவர்களது அசாதாரணமான புகழுரைகளை அள்ளிக்கொண்டு போன சிறுமிகள் வேறு யாருமில்லை; லலிதா-பத்மினி-ராகிணி சகோதரிகள்தான்.

பத்திரிகாசிரியர்கள் பலர் நடனத்தைக் கண்டு களித்தால் அத்துடன் சும்மா இருக்க முடியுமா? தங்கள் வாசக நேயர்களுடன் அந்த ஆனந்தத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டியது தானே முறை? அப்படியே செய்து தீர்த்தார்கள். எல்லாப் பத்திரிகைகளும் லலிதா-பத்மினியைப் பற்றி பத்தி பத்தியாக எழுதித் தள்ளின. சென்னைப் பத்திரிகைகள் மட்டுமல்லாமல் பம்பாய், கல்கத்தா, டில்லிப் பத்திரிகைகளும் சரமாரியாகப் புகழுரைகளைப் பொழிந்தன. அழகான போட்டோக்களைப் பிரசுரம் செய்தன. பம்பாயிலிருந்து பிரசுரமாகும் "போரம்" என்ற பிரபல வாரப் பத்திரிகை எழுதியிருப்பதைப் பாருங்கள்:

" திருவாங்கூர் சகோதரிகள் பார்ப்பதற்கு ரம்யமாக இருக்கிறார்கள். பழங்கால நடனத்திற்குத் தேவையான கலையுணர்ச்சி அவர்களிடம் அபரிமிதமாக இருக்கிறது. கலையுலகில் அவர்கள் தங்களுக்கு ஒரு நிரந்தரஸ்தானம் தேடிக்கொண்டு விட்டார்கள். சென்னை விருந்து மண்டபத்தில் அகில இந்திய பத்திரிகாசிரியர் மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்காக இவர்களது நாட்டியம் நடந்தது. வந்திருந்த பத்திரிகைப் பிரதிநிதிகள் இதை வெகுவாகப் புகழ்ந்தனர். காட்சி முடிவில், தலைவர்

தேவதாஸ் காந்தி பத்திரிகைக்காரர்களின் சார்பில் அவர்களுக்கு சன்மானம் வழங்கினர். ஐரோப்பிய அமெரிக்கப் பிரதிநிதிகள் சிலர் அவர்களை " அழகிகள் " என வர்ணித்தார்கள். பத்திரிகாசிரியர் மகாநாட்டிலேயே சிறந்த பகுதி இதுதான் என்று நாங்கள் கருதினேம் "

திருவாங்கூர் சகோதரிகள் என்று புகழ்பெற்றிருக்கும் லலிதா—பத்மினி சகோதரிகள் திருவாங்கூர் ராஜ்யத்தில் ஒரு அந்தஸ்துள்ள உயர் குடும்பத்தில் பிறந்தவர்கள். திருவாங்கூர் அரச குடும்பத்திற்கும் லலிதா—பத்மினி குடும்பத்திற்கும் தொடர்பு இருக்கிறது. லலிதா—பத்மினியின் பெரிய தாயாரின் கலை ஆர்வமே அவர்களை நடனத்தில் ஈடுபடச் செய்திருக்கிறது. அவருக்கு மலாயாவில் சொந்த ரப்பர் தோட்டங்களும் இருக்கின்றன. திருவாங்கூரில் பல தொழில் ஸ்தாபனங்களில் டைரக்டராகவும் இருக்கிறார். மற்றொரு பெரிய தாயார் திருவாங்கூர் மஹாராணியின் சகோதரரின் மனைவி.

லலிதா—பத்மினியின் தாய் மாமன் ஒருவர் இந்திய கப்பற்படையில் லெப்டினென்ட் பதவி வகிக்கிறார். மற்றும் பல சொந்தக்காரர்கள் பல பொறுப்புள்ள அரசாங்கப் பதவிகளை வகித்து வருகின்றனர்.

பிரபல திருவாங்கூர் நடன ஆசிரியரான கோபிநாத்திடம் லலிதா—பத்மினி சகோதரிகள் முதலில் நடனப் பயிற்சி பெற்றனர். கதகளி, பரதம், மணிபுரி ஆகிய மூன்று துறைகளிலும் அவர்கள் கவனம் செலுத்தி இவைகள் எல்லாவற்றிலும் நல்ல பாண்டித்தியம் பெற்றுள்ளனர்.

பிரசித்திபெற்ற வடநாட்டு நடனக்கலைஞர் உதய சங்கர் ஓர் முறை லலிதா—பத்மினி சகோதரிகளின் நடனத்தைப் பார்க்க நேர்ந்தது. இவர்களது நடனத்தை அவர் மிகவும் ரஸித்தார். தமது "கல்பனா" ஹிந்திப் படத்தில் நடனமாட இவர்களையும் ஒப்பந்தம் செய்து கொண்டார். இத்துடன் இவர்களது சினிமா பிரவேசமும் ஆரம்பமாயிற்று. ஆயினும் இவர்கள் நடனமாடி வெளிவந்த முதல் படம் "கன்னிகா". இப்படத்தில் இவர்களது சிவமோகினி நடனம் வெகு அற்புதமாக அமைந்திருக்கிறது. அங்க நெளிவுகளும் சந்தர்ப்பத்திற்கேற்ற முகபாவமும் பார்ப்போரைப் பரவசப் படுத்தக் கூடிய

தாயிருக்கின்றன. இவர்களுக்கு நடிப்புத்திறனும் உண்டு என்பதை இப்படத்திலேயே காட்டியுள்ளனர்.

உதய சங்கர் சமீபத்தில் ஒரு நடன கோஷ்டியுடன் அமெரிக்கா, ஐரோப்பா முதலிய நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்ய உத்தேசித்திருக்கிறார். இந்த கோஷ்டியில் சேர்ந்து கொள்ளும்படி லலிதா—பத்மினி சகோதரிகளுக்கும் உதய சங்கர் அழைப்பு விடுத்திருக்கிறார்.

தற்போது லலிதா—பத்மினி சகோதரிகள் "வேதாள உலகம்," "கோகுல தாஸி," லிடாடல் "ஞானசவுந்தரி," "பக்த ஜனு", "போஜன்" முதலிய படங்களில் நடனமாடி வருகின்றனர். 'பக்ஷிராஜா' ஸ்ரீராமுலு நாயுடு ஏராளமான பணச்செலவில் தயாரித்து வரும் "பவளக்கொடி"யிலும் இவர்கள் நடனமாடுவார்கள். இவைதவிர சிலோன் தியேட்டர்ஸாரின் சிங்களப்படமான 'கபடி அரட்சகயா'விலும் இவர்கள் நடனமாடியிருக்கிறார்கள்.

லலிதாவுக்குத் தற்போது வயது பதினாறு ஆகிறது. பத்மினிக்குப் பதினைந்து வயது. நாட்டியத்திற்குத் தகுதியான உயரமும் பருமனும் பெற்றிருப்பது அவர்களது கலைக்குப் பெரிதும் உதவி யளிக்கிறது. வீட்டில் உபாத்தியாயினி ஒருவரை அமர்த்திக்கொண்டு ஆங்கிலம் பயின்று வருகின்றனர்.

சென்ற வருஷம் டிஸம்பர் மாதம் 29-ம் தேதி சென்னை கவர்னர் அகில இந்திய மாதர் மகாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகளுக்கு கிண்டி சர்க்கார் மாளிகையில் ஒரு விருந்தளித்தார். அந்த சபையில் லலிதா-பத்மினி சகோதரிகள் நாட்டிய மாடினார்கள். வந்திருந்தோர் அனைவரும் சகோதரிகளின் கலைத்திறமையை மிகவும் பாராட்டினர்.

சகோதரிகளின் நாட்டியங்களில் சாகுந்தலம், ராதா கிருஷ்ணா, பாம்பாட்டி நடனங்கள் மிகவும் சிலாகிக்கத் தக்கவை. இவர்கள் 'வள்ளி திருமணம்' என்ற நாட்டிய நாடகத்தை புதிய முறையில் தயார் செய்திருக்கிறார்கள்.

லலிதா-பத்மினி சகோதரிகள் தங்கள் கலாஸேவையைத் தொடர்ந்து செய்து வரவேண்டுமென்பதே கலை ஆர்வமுள்ள தமிழர்களின் ஆசை.



டி. சூர்யகுமாரி



டி. ஆர். ரஜனி




விஜயகுமார்



புளிமூட்டை ராமசாமி அய்யர்

# டி. எஸ். பாலையா

நான் பத்து வயதுச் சிறுவனு யிருந்தபொழுது ஒரு வேர்க் கடலைக் கடையில் பற்று வரவு வைத்துக் கொண்டிருந்தேன். காலணு, அரையணுவுக்கு வேர்க்கடலை கடன் வாங்கித் தின்பது, இரண்டு மூன்று நாட்களில் கடனைத் திருப்பிக் கொடுப்பது, இப்படியே செய்து கொண்டிருந்தேன். நாளடைவில் கடைக்காரனுக்கும் என்மேல் நம்பிக்கை ஏற்பட்டது. கொஞ்சம் தாராளமாகக் கடன் கொடுக்க ஆரம்பித்தான். நானும் தாராளமாகக் கடன் வாங்க ஆரம்பித்தேன். கடைசியில் கடன் இரண்டரையணுவுக்கு வந்து நின்றது. அதிலிருந்து பிடித்தது சனியன்! அதுவரையில் எனக்கு மரியாதை கொடுத்துவந்த கடைக்காரன் என்னைத் தாறுமாருகப் பேச ஆரம்பித்தான். "என்னடா தெனுலிராமா! வாங்கித் திங்கமட்டும் தெரிஞ்சுது! கடனைத் திருப்பிக் கொடுக்கத் தெரியலையோ!" என்று நாலுபேருக்கு நடுவில் அவன் கேட்கும்பொழுது என் எண்சாண் உடம்பும் ஒரு சாணுகக் குறுகிவிடும்.

காலணு, அரையணு என்ருல் அம்மாவிடம் கெஞ்சிக் கேட்டு வாங்கிக்கொண்டு வந்து கொடுத்துவிடலாம். இரண்டரையணுவுக்கு எங்கேபோவது? கொடுக்காவிட்டாலோ கடைக்காரன் தாறுமாருகப் பேசுகிருன். என்ன செய்வது? கடைசியில் கடைக்காரன் முகத்திலேயே விழிக்காமலிருப்பது தான் சரியான வழி என்று முடிவு செய்தேன். எங்கள் வீட்டிலிருந்து பள்ளிக்கூடத்திற்குக் குறுக்கு வழியில் சென்ருல் அவன் கடையைத் தாண்டித்தான் செல்லவேண்டும். ஆகவே குறுக்கு வழியில் செல்லாமல் ஊரையே பிரதக்ஷிணம் செய்துகொண்டு ஒன்றரை மைல் நடந்து பள்ளிக்கூடம் செல்லுவேன். மறுபடியும் மாலையில் ஊரைப் பிரதக்ஷிணம் செய்து கொண்டு வீடு திரும்புவேன்.

ஆனுல் கடைச்காரன் ஒரு நாள் ஏமாறுவான், இரண்டு நாள் ஏமாறுவான்; எப்பொழுதுமே ஏமாந்து உட்கார்ந்திருப்பானு? அவனுக்கு எனது சூழ்ச்சி தெரிந்துவிட்டது.

பள்ளிக்கூட நேரத்தில் வகுப்பிற்குள்ளேயே திடும் பிரவேசம் செய்து எனது அங்க அழகுகளை வர்ணிக்க ஆரம்பித்தான். எனது தலை பனம்பழத்தைப் போலிருக்கிறது என்று அவன் வர்ணித்ததை இன்றும் என்னால் மறக்க முடியவில்லை. ஏனெனில் அந்த உபமானம் அவ்வளவு பொருத்தமா யிருந்தது! காளிதாசனால் கூட அவ்வளவு அழகான உபமானத்தைத் தேடிக் கண்டுபிடித்திருக்க முடியுமா என்பது சந்தேகம்தான்!

வகுப்பில் வந்து அவன் கூச்சல் போட்ட அவமானத்தில் நான் மனம் நொந்து கிடக்கையில் எனது உபாத்தியாயர் ரங்கப்பராயர் வேறு என்னைப் பதம் பார்க்க ஆரம்பித்து விட்டார்!

இந்த கதையைக் கேட்டதும் நீங்கள் கேலியாகச் சிரிக்கிறீர்கள். ஆனால் 'வில்லன்' டி. எஸ். பாலையா இந்தக் கதையைக் கேட்டதும் என்ன செய்தார் தெரியுமா? பூரண அனுதாப உணர்ச்சியுடன், "இந்த அவஸ்தையெல்லாம் பட்டால்தான் ஸார் தெரியும். நானும் சிறுவயதில் இதே மாதிரி ஒரு இக்கட்டில் மாட்டிக்கொண்டு தவித்தேன், ஸார். கடைசியில் உயிர் பிழைத்ததே பெரிய காரியமாய்ப் போய் விட்டது," என்று என் முதுகில் தட்டிக் கொடுத்து எனக்கு ஆறுதல் கூறினர்.

டி. எஸ். பாலையா திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்தவர். திருநெல்வேலி தான் அவரது சொந்த ஊர். அவரது தகப்பனர் சுப்ரமண்ய பிள்ளை ஒரு மிராசுதார். பாலையா திருநெல்வேலியிலேயே இரண்டாவது பாரம்வரை படித்தார். பள்ளிக்கூடத்தில் படித்துவந்த நாட்களில் படிப்பில் அவர் கவனம் சென்றதே கிடையாது. ஊர் சுற்றுவதிலும், டிராமா, சர்க்கஸ் வேடிக்கைகள் பார்ப்பதிலும் தான் அவருக்கு ஆவல் இருந்தது.

அப்பொழுது திருநெல்வேலியில் ஒரு நாடகக் கம்பெனியார் நாடகம் நடத்திவந்தார்கள். நாடகம் பார்க்க பாலையாவும் சென்றார். ஆனல் டிக்கட் வாங்குமிடத்தில் ஒரே கும்பல். பாலையாவுக்கோ சீக்கிரம் கொட்டகைக்குள் சென்று நாடகத்தைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல். காத்திருந்து

டிக்கட் வாங்குவதற்கு வேண்டிய பொறுமை அவரிடம் இல்லை. அவ்வளவுதான்; சுவரேறி தியேட்டர் காம்பவுண்டிற்குள் குதித்தார் பாலையா. உடனேயே உள்ளே நின்று கொண்டிருந்த காவல்காரன் பாலையாவைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு 'சாத்துபடி' நடத்த ஆரம்பித்தான்! அடிகளுக்கு நடுவே வாய்க்கு வந்தபடி பாலையாவைத் திட்டவும் செய்தான். தியேட்டர் முழுவதும் ஒரே கோல்மாலும், களேபரமும் ஆரம்பமாயின. கடைசியில் பாலையாவின் சகோதரர் அங்கு வந்து அவரை விடுவித்தார்!

இந்த சம்பவம் நடந்த அன்று பாலையாவின் மனதில் ஒரே எண்ணம்தான் வேரூன்றியது. "நாமும் ஒரு நாடக நடிகராக இருந்தால் நம்மை இவ்வளவு கேவலமாகப் பேசி அடித்திருப்பார்களா? இருக்கட்டும். நானும் ஒரு நடிகனாகி இந்தப் பயல்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கிறேன்," என்ற எண்ணம்தான் அது.

எண்ணம் தோன்றிவிட்டது. ஆனால் காரியத்தில் அதை அமுல் நடத்துவது எப்படி? நாடக நடிகனாவதற்கு வழி யென்ன?

இந்த சமயத்தில் பாலையாவுக்கு ஒரு நண்பன் வந்து சேர்ந்தான். "டேய், எனக்குத் தெரிந்த சர்க்கஸ் கம்பெனி ஒன்று இருக்கிறது. அதில் உன்னையும் சேர்த்து விடுகிறேன்," என்று ஆசைகாட்டினான். 'ஒன்றுமில்லாததற்கு ஒரு பெண்ணாவது பிறந்ததே' என்று சந்தோஷப்படுவது போல பாலையாவும் சர்க்கஸில் சேர சந்தர்ப்பம் கிடைக்கும் என்று தெரிந்ததும் மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்தார். "ஓ ரெடி. சர்க்கஸில் சேர நான் தயார். சேர்த்துவிடு," என்று நண்பனிடம் கூறினார்.

ஆனால் நண்பன் எமகாதகன். "என்னப்பா, சும்மா முடியுமா? வீட்டிலிருந்து பணத்துடன் கிளம்பு. அந்த ஸர்க்கஸ் கம்பெனி ஆடிக் கொண்டிருக்கும் இடம் போய்ச் சேரலாம்," என்றான்.

அன்றிரவே பாலையா வீட்டிலிருந்து கொஞ்சம் பணத்தை அபேஸ் செய்து நண்பனுடன் ஊரைவிட்டு ஓடி விட்டார். இரண்டு நண்பர்களுமாக ஊர் ஊராகச் சுற்றினார்கள்.

நண்பன் மூன்று வேளையும் பாலையா செலவில் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஆனால் சர்க்கஸ் கம்பெனிதான் கண்ணில் தட்டுப்படவில்லை.

கடைசியில் இரண்டு பேரும் மானாமதுரை வந்து சேர்ந் தார்கள். அங்கு வந்து சிலநாட்கள் கழிந்தன. பாலையாவின் கையிலிருந்த பணமும் கரைந்தது; நண்பனும் மாயமாய் மறைந்து விட்டான்!

முன்பின் தெரியாத ஊரில் கையில் ஒரு காசுமின்றித் தனி யாக விடப்பட்ட பாலையா அழுதுகொண்டே அந்த ஊரில் ஓட்டல் நடத்திவந்த ஒரு பிராமண மாதுவிடம் சென்று தனது வரலாற்றை விவரமாகக் கூறினார். அந்த ஸ்திரீயும் பாலை யாமீது இரக்கம் கொண்டு அவருக்குத் தங்க இடமும் வயிறு நிரம்ப உணவும் கொடுத்து ஆதரித்தார்.

அந்த வீட்டிலிருந்து கொண்டே வேலைக்கு முயற்சித் தார் பாலையா. கடைசியில் அந்த ஊர் கசாப்புக் கடைக்காரன் ஒருவன் நாடகக்கம்பெனி ஆரம்பிக்கப் போவதாகக் கேள்விப் பட்டு அவனிடம் சென்று தன்னையும் ஒரு நடிகனாகச் சேர்த் துக்கொள்ளும்படி கேட்டார். கசாப்புக் கடைக்காரனும் அவரை ஒரு நடிகனாகச் சேர்த்துக்கொண்டு நாடகக்கம்பெனி ஆரம்பமாகும்வரை தன் வீட்டிலேயே சாப்பிட்டுக்கொண்டு இருக்கும்படி பாலையாவிடம் கூறினான். அன்று முதல் பாலையா அந்தக் கசாப்புக்கடைக்காரன் வீட்டில் குடியேறினார்.

அப்பொழுதெல்லாம் பாலையா இறைச்சி சாப்பிட மாட் டாராம். கசாப்புக்கடைக்காரன் வெட்டுவதையும், குத்து வதையும் பார்த்தாலே அவருக்கு பயங்கரமாக இருக்குமாம்! நாட்கள் வந்து போய்க்கொண்டேயிருந்தன. ஆனால் கசாப் புக்கடைக்காரனின் நாடகக்கம்பெனி ஆரம்பித்த பாட்டைக் காணோம். அந்த வாழ்க்கை பாலையாவுக்குப் போதும் போது மென்றாய் விட்டது! எப்படியாவது அங்கிருந்து தப்பி ஓடி விட வேண்டுமென்று தீர்மானித்தார். ஆனால் இத்தனை நாள் வஞ்சனையில்லாமல் தின்றுவிட்டு இப்பொழுது போவதென் றால் கசாப்புக்கடைக்காரன் சும்மா விட்டு விடுவானா? அவ னது கத்தியையும், கபடாவையும் நினைத்தாலே பாலையாவுக்குப் பீதியாயிருந்தது. கடைசியில் கசாப்புக் கடைக்காரனுக்குத்

தெரியாமல் அந்த ஊரைவிட்டு ஓடி விடுவது என்று பாலையா முடிவு செய்து பழைய பிராமண ஸ்திரீயிடம் வந்து நிலைமையை விவரித்துக்கூறித் திருநெல்வேலி திரும்பிச் செல்லப் பணஉதவி செய்யும்படி கேட்டார். அந்த அம்மாள் ஐம்பது ரூபாய் எடுத்துக்கொடுத்தாராம். ஐம்பது ரூபாய் மிகவும் அதிகமென்றும், இருபது ரூபாயே போதுமென்றும் பாலையா கூறி வெள்ளி ரூபாயாக இருபது ரூபாய் வாங்கிக் கொண்டு அந்த அம்மாளுக்குக் கும்பிடு போட்டுவிட்டு அங்கிருந்து நடந்தார்.

அப்பொழுது அந்த ஊர் ஆற்றில் வெள்ளம் இருகரையும் புரண்டு ஓடிக்கொண்டிருந்தது. இரவு நேரம் ஆற்றைத் தாண்டித்தான் ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்ல வேண்டும். ஆற்றைத்தாண்ட பாலத்திற்குப் போவதாயிருந்தால் கசாப்புக் கடைக்காரன் வீடு பாலத்திற்கு அருகில் தானிருந்தது. கசாப்புக்கடைக்காரன் பார்த்து விட்டால் ஆளையே சட்னி செய்து விடுவான்!

என்ன செய்வதென்று யோசித்தார் பாலையா. கடைசியில் பாலத்தின் வழியாகச் செல்லாமல் நீந்தியே ஆற்றைக்கடப்பது என்று முடிவு செய்தார். ஆற்றின் கரையில் சோணைய ஸ்வாமி கோயிலிருந்தது. ஒரு ரூபாய்க்கு கற்பூரம் வாங்கி சோணைய ஸ்வாமி ஸன்னதியில் கொளுத்திப் பிரார்த்தனை செய்துவிட்டு ஆற்றில் இறங்கி நீந்த ஆரம்பித்தார்.

ஆற்றிலோ வெள்ளம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துக்கொண்டேயிருந்தது. மனம் தளராமல் நீந்தி அக்கரையை நெருங்கினர் பாலையா. அந்த சமயத்தில் அவரது உடல் ஒரு சுழியில் மாட்டிக்கொண்டது. சாதாரணமாக நமது ஆற்று வெள்ளங்களில் சுழியில் மாட்டிக்கொண்டால் அப்புறம் மீளுவது என்பது அதமபட்சம்தான். பாலையாவும் நம்பிக்கையை இழந்தார். "இவ்வளவு தூரம் நீந்திக் கரையை நெருங்கியும் என் கதி இப்படியா முடியவேண்டும்? சோணையா நீயேகதி!" என்று அப்பொழுது பாலையா மனம் வருந்தினராம்.

அதே நிமிஷத்தில் பாலையாவின் உள்ளங்கால்களை யாரோ பலமாக உந்தித் தள்ளுவதுபோல் தோன்றிற்றும். அடுத்த நிமிஷம் கரையில் பத்திரமாகத் தூக்கியெறியப்பட்டார்

பாலையா. திரும்பிப் பார்த்தால் சுழியிருந்த இடத்தில் சோணைப ஸ்வாமியின் விக்ரகம் ஒரு நிமிஷம் கம்பீரமாகத் தோன்றி மறைந்ததாம்!

அந்த சமயத்தில் பாலையாவின் உணர்ச்சிகள் எப்படியிருந்திருக்குமென்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

"என் அப்பனே சோணையா! கசாப்புக் கடைக்காரனின் கொடுமையிலிருந்து என்னை நீதான் காப்பாற்றினுய்! ஆற்றுச் சுழியிலிருந்தும் நீதான் காப்பாற்றினுய் ஒரு காலத்தில் நானும் இல்லறம் நடத்தி எனக்கும் ஒரு குழந்தை பிறந்தால் அந்தக் குழந்தைக்கு உன் பெயரையே வைத்து, உன் கோயிலிலேயே வந்து முடியிறக்குகிறேன்," என்று அவர் பிரார்த்தனை செய்ததை பாலையா வர்ணித்த பொழுது என் கண்களில் கண்ணீர் மல்கிற்று.

"இவன்தான் என் மகன் சோணையா. அந்த சக்தி வாய்ந்த ஸ்வாமியின் பெயரைத்தான் இவனுக்கு வைத்திருக்கிறேன். அதே கோவிலில் இவனுக்கு முடியும் இறக்கினேன்," என்று கூறிக்கொண்டே பெருமையுடன் தனது திருக்குமாரனை பாலையா எனக்கு அறிமுகப்படுத்தினுர்.

இவ்வளவு அல்லல்பட்டுக் கசாப்புக் கடைக்காரனிடமிருந்து உயிர் தப்பி ஊர் வந்து சேர்ந்தபிறகும்கூட நாடகத்தில் நடிக்க வேண்டுமென்ற ஆவல் பாலையாவைவிட்டு நீங்கிய பாடில்லை. தனது சகோதரனை நச்சரித்து அவர் மூலமாகவே மதுரை ஜெகந்நாதய்யர் நாடகக் கம்பெனியில் ஒரு நடிகராகச் சேர்ந்தும் விட்டார். அப்பொழுது பாலையாவுக்கு வயது பதினைந்து.

ஜகந்நாதய்யர் கம்பெனியில் "சதி அனசூயா" நாடகத்தில் முதன் முதலாக டி. எஸ். பாலையா நடித்தார். அந்த நாடகத்தில் அவருக்குக் கிருஷ்ணன் வேஷம் கொடுக்கப்பட்டது. அதற்குப் பிறகு பல நாடகங்களில் பல பல வேஷங்களில் பாலையா நடித்தார். அயன் ராஜபார்ட், அயன் ஸ்திரீ பார்ட்களில் கூடத்தோன்றி நடித்திருக்கிறுர் என்றுல் பார்த்துக் கொள்ளுங்களேன்! ஜகந்நாதய்யர் கம்பெனியில் முதல் ஆறு மாதத்திற்கு யாதொரு சம்பளமுமின்றி பாலையா ஊழியம்

செய்தார். அதற்குப்பிறகு அவருக்கு மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் கொடுக்கப்பட்டது. ஜகந்நாதய்யர் கம்பெனியில் மூன்று வருஷம் சேவைசெய்த பிறகு அங்கிருந்து விலகி நாகலிங்கம் செட்டியாரின் . நாடகக்கம்பெனியில் மாதம் முப்பத்தைந்து ரூபாய் சம்பளத்தில் பாலையா சேர்ந்தார்.

அந்தக் கம்பெனியில் இரண்டரை வருஷம் நடித்துவிட்டு ராஜாம்பாள் கம்பெனியில் சேர்ந்தார். அந்தக் கம்பெனியில் எம். கே. ராதாவும் நடித்துவந்தார். அங்கே நடிகர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துவந்தவர் எம். கே. ராதாவின் தகப்பனார் ஸ்ரீ எம். கந்தஸ்வாமி முதலியார். அந்தக் கம்பெனியில் பாலையா நான்கு வருஷம் வேலை பார்த்தார்.

பல வருஷங்கள் தொடர்ந்தாற் போல் நாடக நடிகராக நடித்து வந்தவரைத் திரையுலகம் ஸ்வீகரித்துக் கொண்டதில் ஆச்சரியமில்லை.

1934ம் வருஷத்தில் பாலையா முதன் முதலாகத் திரையில் தலையைக் காட்டினார். அன்றிலிருந்து இன்றுவரை ரஸிகர்களின் அபிமானத்திற்குப் பாத்திரமாக அவர் இருந்து வருவதொன்றே அவரது நடிப்புத் திறமைக்குச் சரியான சான்றாகும்.

பாலையா முதன் முதலாக நடித்த படம் மனோரமா பிலிம் கம்பெனியாரின் "சதி லீலாவதி". எல்லிஸ் ஆர். டங்கன் டைரக்ட் செய்த இந்தப் படத்தில் எம். கே. ராதாவுடன் பாலையாவும் நடித்தார். அதற்குப் பிறகு டங்கன் டைரக்ட் செய்த "இரு சகோதரர்க"ளில் நடித்துப் புகழ்பெற்றார். பிறகு "சதி அனசூயா"வில் "கர்வி பார்"சில் நடித்தார்.

அதன் பின்னர் மறுபடியும் டங்கன் டைரக்ட் செய்த "அம்பிகாபதி"யில் வில்லனாக நடித்து வில்லாதி வில்லன் என்று புகழ்பெற்றார். படித்தவர்களாலும் பாமரர்களாலும் பாராட்டப்பட்டு நல்ல பண வசூலையும் கொடுத்த ஒரு சில தமிழ்ப் படங்களில் "அம்பிகாபதி"யும் ஒன்று. "அம்பிகாபதி"யில் பாலையாவின் நடிப்பு பிரமாதமாக இருந்தது. அது முதல் வில்லன் பாத்திரத்திற்கு பாலையாவைத் தவிர

வேறு யாரும் பொருத்தமில்லை என்று கூறும்படியாக பாலையா தமது புகழை ஸ்திரப்படுத்திக் கொண்டு வருகிறார்.

"அம்பிகாபதி"க்குப் பிறகு "பம்பாய் மெயில்", "உத்தம புத்திரன்", "பூலோக ரம்பை", "மனோன்மணி", "ஆர்ய மாலா", "பிரிதிவிராஜ்," "ஜகதலப் பிரதாபன்" "சாலி வாஹனன்," "பர்மாராணி", "நாட்டிய ராணி", "சித்ரா" எம். எஸ். சுப்புலக்ஷ்மி நடித்த "பக்த மீரா", 'வால்மீகி', 'ராஜ யோகி', 'ராஜ குமாரி' முதலிய படங்களில் நடித்துப் பேரும் புகழும் பெற்றார். பின்னர் "ஷண்பகவல்லி"யிலும் 'மாரியம்ம'னிலும் கதா நாயகனாக நடித்தார். தற்போது 'பிழைக்கும் வழி', 'மோகினி', 'வேலைக்காரி' ஆகிய படங்களில் நடித்துவருகிறார்.

பாலையா ஒரு பாத்திரமாக நடிக்கும்போது அந்தப் பாத்திரமாகவே மாறிவிடுவார். 'அம்பிகாபதி'யில் மேல் மாடியில் கத்திச்சண்டை நடந்து பாலையா குத்தப்பட்டுக் கீழே விழுகிறாரல்லவா? அந்தக் காட்சியில் அபரிமிதமான உணர்ச்சியுடன் பாலையா நடித்ததால் கீழே விழும்பொழுது தயாராக இருந்த வலையில் விழுவதற்குப் பதிலாக 'தொபுகடீர்' என்று கட்டாந் தரையிலேயே விழுந்து விட்டாராம்! அன்றே ஆசாமி 'கயா' என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள்! ஆனல் தெய்வானுக்ரகத்தால் பாலையா பிழைத்தெழுந்து விட்டார்!

'அம்பிகாபதி'யில் எம். கே. டி. பாகவதரும் பாலையாவும் கத்திச் சண்டை போடுகிறார்களே, அந்த இடத்தில் பாகவதருக்குக் கத்திச் சண்டைபோடக் கற்றுக் கொடுத்தவர் பாலையாதான்.

நாடகக் கலையில் பாலையாவுக்கு மிகவும் ஆர்வம் உண்டு. "ஜகதல ப்ரதாப"னில் நடித்துக் கொண்டிருந்த சமயத்தில் "ஸாயி பாபா ஸங்கீத ஸபா" என்ற பெயரில் பாலையா ஒரு நாடகக் கம்பெனியை ஆரம்பித்தார். அதில் சுமார் முந்நூறு நடிகர்கள் வேலை பார்த்து வந்தார்களாம். கோபிசெட்டிபாளையம், ராசிபுரம், ஆத்தூர், துறையூர், மேட்டுப்பாளையம், திருச்சினுப்பள்ளி, பெரம்பலூர், திருக்காட்டுப்பள்ளி, கும்பகோணம், புதுச்சேரி, ஆகிய இடங்களில் இந்தக் கம்பெனி

நாடகங்கள் நடத்தினார்கள். கம்பெனி சுமார் மூன்று வருஷ காலம் நடந்தது. கம்பெனி நாடகங்களுக்கு நல்ல பேரும், மதிப்பும், புகழும் கிடைத்ததாம். ஆனால் ரூபாய் அணா பைசாக் கணக்கைப் பார்க்கும்பொழுது கம்பெனி நஷ்டத்தில் நடந்து கொண்டிருப்பது தெரிந்தது. ஆகவே புதுச்சேரியில் பாலையா கம்பெனியைக் கலைத்துவிட்டார். இந்தக் கம்பெனியை நடத்தியதால் சுமார் ஒரு லக்ஷ ரூபாய் அவருக்கு நஷ்டமாகி விட்டதாம்!

காலஞ்சென்ற கலைஞர் எஸ். ஜி. கிட்டப்பாவுடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற்றவர் பாலையா. இப்பொழுதும் கிட்டப்பாவின் பெயரைக் கேட்டாலே அவர் கண்களில் கண்ணீர் பெருகிவிடுகிறது. "அவரைப்போல் பாட இனி மேல் யார் ஸார் பிறக்கப் போகிறார்கள்!" என்று அங்கலாய்ப்பார்.

1941-ம் வருஷத்தில் கோவையில் பாலையாவுக்கு விவாகம் நடந்தது. மூன்று புதல்வர்களும், ஒரு புதல்வியும் இருக்கிறார்கள். குழந்தைகளின் பெயர்கள் முறையே ஸாயிபாபா, துர்காலக்ஷ்மி, ஸோணையா, தேவசேனாபதி என்பதாகும். குழந்தைகளை மிகவும் பிரியத்துடன் பாலையா வளர்த்து வருகிறார்.

பாலையாவின் தகப்பனார் இறந்துவிட்டார். தாயார் திருநெல்வேலியில் வசித்து வருகிறார்.

பாலையாவின் ஒரே சகோதரரும் இறந்துவிட்டார். அவரது சகோதரி மட்டும்தான் தற்போது உயிருடன் இருக்கிறார்.

"எனக்கு ஆங்கிலம் அறவே தெரியாது," என்று கூறும் பாலையா ஆங்கிலத்தில் பேசினால் புரிந்து கொள்வார். பேசத்தான் முடியாது!

தமிழ், தெலுங்கு, மலையாளம் மூன்றிலும் பாலையாவுக்கு நல்ல பாண்டித்தியமிருக்கிறது. ஹிந்தியும் கற்றுக் கொண்டு வருகிறார்.

குதிரை சவாரி, கத்திச் சண்டை, குத்துச் சண்டை,

மல்யுத்தம் எல்லாவற்றிலும் பாலையா புலியாக விளங்குகிறார். நீந்துவதிலும், மோட்டார் ஓட்டுவதிலும்கூட அவர் நிபுணர்.

"பிறவியிலேயே நான் போக்கிரி ஸார். வந்த சண்டையை விடமாட்டேன். எந்த இடமாயிருந்தாலும் சண்டைக்கு ஆரம்பித்துவிடுவேன். நாலைந்து சினிமாக்களில் நடித்த பிறகு நாலு பேருக்குத் தெரிந்தால் அவமானமே என்று பொறுமையோடிருக்கிறேன்," என்று வெள்ளை மனதுடன் வெளிப்படையாகக் கூறும் பாலையா உண்மையில் இனிய குணங்கள் நிரம்பியவர். படங்களில்தான் வில்லனாக நடிக்கிறாரே தவிர வீட்டில் பசுப்போல்தான் தோற்றமளிக்கிறார். தன் வீட்டைத் தேடி யார் வந்தாலும் அவர்களை முகமன் கூறி வரவேற்று உபசரிப்பார். சாதுக்கள், சன்னியாசிகள், பரதேசிகள் யார் வந்தாலும் பணிவுடன் தன்னாலியன்றதைக் கொடுத்து உதவி செய்யும் தயாள குணமுடையவர்.

பாலையா இப்பொழுது கொஞ்சம் உப்பிக்கொண்டு வருகிறார். வயிறு முன்னுக்கு வந்துகொண்டிருக்கிறது! தகுந்த தேகப்பயிற்சி செய்து இந்த இரண்டு குறைகளையும் சீக்கிரத்தில் போக்கிக் கொண்டால் இன்னும் பல வருஷங்களுக்குத் தன்னிகரற்ற வில்லாதி வில்லனாக பாலையா திகழ்வார் என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

# "மின்மினி" விஜயகுமார்

"ஆறு வயதிலேயே தனது தகப்பனாரை இழந்துவிட்ட சிறுவன் தனது தமக்கை புருஷரின் ஆதரவிலும், தாயாரின் கண்காணிப்பிலும் வளர்ந்து எஸ். எஸ். எல். சி. வரை படிக்கிறான். அத்துடன் அவனது படிப்பு முடிவடைகிறது. கிராமத்திற்குச் சென்று நிலபுலன்களை மேற்பார்வை செய்யும் நோக்கத்துடன் சொந்த கிராமத்திற்குத் திரும்புகிறான். நாளடைவில் ஒரு பண்பட்ட பண்ணையாராக வேண்டும் என்பதே அவனது அப்போதைய ஆவல். ஆனால் நகர வாழ்க்கையில் ருசிகண்ட அவனுக்குக் கிராம வாழ்க்கை விரைவில் கசந்து போகிறது. கிராமத்தை விட்டு மறுபடி நகரத்துக்கே திரும்புகிறான். நகரத்துக்குத் திரும்பினால் பொழுது போக்குக்காகவாவது ஒரு உத்தியோகம் வேண்டுமே! 'உத்தியோகம் புருஷ லக்ஷணம்' என்று வேறு நமது பெரியோர்கள் சொல்லிச் சென்றிருக்கிறார்களே! ஆகவே நகரத்தில் உத்தியோக வேட்டையில் முனைகிறான் வாலிபன். கடைசியில் அவனுக்குப் பிடித்தமான ஒரு வேலையும் கிடைக்கிறது. ஒரு பஸ் சர்விஸில் 'டிராபிக் அசிஸ்டண்'டாக வேலைக்கு அமர்கிறான். பஸ்களில் திடீர்ப்பிரவேசம் செய்து பிரயாணிகள் எல்லோரும் டிக்கட் வாங்கி யிருக்கிறார்களா என்று தணிக்கை செய்துவிட்டு, 'ரைட்!' கொடுக்க வேண்டியதுதான் அவனது வேலை!

சாரமற்ற இந்த வேலையைச் சில மாதங்கள் ஒழுங்காகப் பார்த்து வருகிறான் வாலிபன். திடீரென்று அதிர்ஷ்ட லக்ஷ்மி அந்த வாலிபனைக் கடாக்ஷிக்கிறாள். அதிர்ஷ்டம் அவனைத் தேடிக்கொண்டு வருகிறது. தமது அடுத்த படத்தில் கதாநாயகனாக நடிக்க சங்கீத ஞானமும், முகவெட்டும் கொண்ட ஆண் அழகன் ஒருவன் வேண்டும் என்று தமிழ் நாடெங்கும் தேடிச் சுற்றியலைந்து வந்த ஒரு டைரக்டர் அவ்வாலிபனைப்பற்றிக் கேள்விப்பட்டு அவனைச் சந்திக்கிறார். அவனைப் பார்த்ததுமே அவருக்குப் பிடித்து விடுகிறது. கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகமும் அவனது பாட்டைக்

கேட்ட உடன் பறந்தோடி விடுகிறது! அவனையே தமது படத்தில் கதாநாயகனாக நடிக்கச் செய்கிறார். படம் வெற்றிகரமாக முடிகிறது. ஒரே படத்தின் மூலம் "டிராபிக் அசிஸ்டண்ட்" பதவியிலிருந்து நக்ஷத்திரப் பதவியை எட்டிப் பிடித்து விடுகிறான் அந்த வாலிபன்!"

"எந்த சினிமாக்கதை இது? வாழ்க்கையிலும் இப்படி நடக்குமா?" என்று வியப்புடன் நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது.

இது சினிமாக்கதையல்ல; சினிமா நடிகர் ஒருவரின் கதை இது!

ஆமாம், நடிக நக்ஷத்திரம் விஜயகுமாரின் வாழ்க்கையில் மேற்கண்ட சம்பவங்களெல்லாம் உண்மையாகவே நடந்தன!

விஜயகுமாருக்குப் பூர்வீகம் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள விசலூர் என்ற கிராமம். பிராமண ஜாதியில் ஐயர் வகுப்பைச் சேர்ந்த ஸ்ரீ. வி. என். கோபாலஸ்வாமி ஐயர் என்பவரது புதல்வர்தான் விஜயகுமார்.

விஜயகுமார் ஆறு வயதுப் பையனாய் இருந்தபொழுதே அவரது தகப்பனார் இறந்து விட்டார். தகப்பனாரது மறைவுக்குப் பின் மதுரையில் தமது தாயாரின் பராமரிப்பின் கீழும், தமது தமக்கை புருஷன் ஸ்ரீ. வீரமணி அய்யரின் கண்காணிப்பின் கீழும் விஜயகுமார் வளர்ந்து வந்தார்.

காலஞ்சென்ற ஸ்ரீ. எஸ். ஜி. கிட்டப்பாவையும், அவரது அபார சங்கீத ஞானத்தையும் அறியாதவர் தமிழ் நாட்டிலேயே கிடையாது. அவர் உயிருடன் இருந்த வரையில் தமிழ் நாடக மேடையில் அவர் தனி அரசு செலுத்தி வந்தார். இயற்கையில் நல்ல சங்கீத ஞானமும், 'கணீ'ரென்ற சாரீர சம்பத்தும் வாய்த்திருந்த விஜயகுமாருக்கு ஸ்ரீ. எஸ். ஜி. கிட்டப்பாவின் பாடல்கள்மீது சிறு வயதிலேயே அபார மோகம் விழுந்து விட்டது. கிராமபோன் ரிகார்டுகளில் கிட்டப்பாவின் கானாமிர்தத்தைக் கேட்டு அதே பாட்டுக்களைத் தாமும் திரும்பப் பாட ஆரம்பித்தார் விஜயகுமார். நாளாவட்டத்தில் கிட்டப்பாவின் பாட்டுக்களை 'இமிடேஷன்' செய்து பாடுவதில் விஜயகுமாருக்கு நல்ல புகழ் ஏற்பட்டது.

அப்பொழுது விஜயகுமார் மதுரை ஏ. ஆர். ஹைஸ்கூலில் படித்து வந்தார். வாட்ட சாட்டமாக வளர்ந்திருந்த அவரது ஆகிருதியும், சங்கீத ஞானமும் அவரது உபாத்தியாயர்களைப் பெரிதும் கவர்ந்தன. ஒவ்வொரு வருஷமும் பள்ளிக்கூடத்தில் ஏதாவது ஒரு நாடகம் நடத்தி, அதில் விஜயகுமாரையும் நடிக்கச் செய்து பார்த்து மகிழ்ந்து வந்தார்கள் அவரது உபாத்தியாயர்கள். பள்ளிக்கூட நாடகங்களில் விஜயகுமாருக்கு ஒரு அலாதி மதிப்பு ஏற்பட்டது.

படிப்பிலும் விஜயகுமார் சோடையாகப் போகவில்லை. நூற்றுக்கு நூறு என்று உருப்போட்டு மார்க்குகள் வாங்காவிட்டாலும் எல்லாப் பாடங்களிலும் சுமாரான மார்க்குகள் வாங்கி வந்தார்.

1940-ம் வருஷத்தில் விஜயகுமார் எஸ். எஸ். எல். சி. பரீக்ஷை பாஸ் பண்ணினார். அத்துடன் அவரது பள்ளிக்கூடப் படிப்புக்கும் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

படிப்பு முடிந்ததும் தஞ்சாவூர் ஜில்லாவில் தமது பூர்வீக கிராமமாகிய விசலூருக்கே திரும்பினார் விஜயகுமார். தமது பிதிரார்ஜித நிலபுலன்களைத் தமது மேற்பார்வையின் கீழ் சாகுபடி செய்து ஒரு சிறந்த பண்ணையாராக விளங்கவேண்டுமென்பதே அவரது அப்போதைய ஆவலாயிருந்தது. தமது வாழ்க்கை முழுவதையும் அமைதியாகக் கிராமாந்திரத்திலேயே கழித்து விடலாம் என்று மனக்கோட்டை கட்டிக் கொண்டுதான் விஜயகுமார் விசலூர் சென்றார்.

ஆனால் நக்ஷத்திர நடிகராகப் புகழுடன் விளங்கவேண்டும் என்று அவர் தலையில் பிரம்மதேவன் அன்றே எழுதி விட்டானே! அவன் எழுத்தை மாற்ற முடியுமா?

கிராம வாழ்க்கையில் ஆர்வத்துடன் சென்ற விஜயகுமாருக்குக் கிராம வாழ்க்கை விரைவில் கசந்து போய்விட்டது! நகர வாழ்க்கையில் பல்வேறு விதமான நவநாகரீக வசதிகளுடன் வாழ்ந்து வந்த அவருக்குச் 'சப்'பென்றிருந்த கிராம வாழ்க்கை மீதே சலிப்பு ஏற்பட்டு விட்டது! 'மறுபடி நகரத்துக்கே போகலாம்,' என்று மதுரைக்குத் திரும்பி வந்தார் விஜயகுமார்.

மதுரைக்கு வந்தால் வேலை வெட்டி எதுவுமின்றி சும்மா இருப்பது அழகில்லை அல்லவா? ஏதாவது உத்தியோகம் வேண்டுமே! ஆகவே உத்தியோக வேட்டையிலிறங்கினர். கடைசியில் அவருக்குப் பிடித்தமான உத்தியோகமும் கிடைத்தது. எஸ். ஆர். வி. எஸ். பஸ் சர்விஸில் டிராபிக் அசிஸ்டண்டாக அவர் நியமிக்கப்பட்டார்.

டிராபிக் அசிஸ்டண்ட் வேலை என்றால் என்னவென்று தான் தெரியுமே! திடீரென்று பஸ்களுக்குள் நுழைந்து பிரயாணிகளின் டிக்கட்டுகளைத் தணிக்கை செய்யும் வேலை தான்! ருசியற்ற இந்த வேலையைப் பொறுமையுடன் சுமார் ஒரு வருஷகாலம் பார்த்து வந்தார் விஜயகுமார். அவரது கம்பீரமான உருவத்தைப் பார்த்த பலர் சினிமா உலகில் நுழைந்தால் பிரபல நடிகராக அவர் திகழ்வார் என்று சொல்லிக் கொள்வார்களாம். அதைக்கேட்டுக் கேட்டு சினிமாவில் நடிக்க வேண்டுமென்ற ஆசை விஜயகுமார் மனதிலும் தோன்றிவிட்டது. ஆசையிருந்தால் போதுமா? எதற்கும் காலம் கைகூடி வரவேண்டுமே! பொறுமையுடன் விஜயகுமார் காத்திருந்தார்.

அவரது பொறுமை வீண் போகவில்லை. தமது "கடகம்" தமிழ்ப் படத்தில் கதா நாயகனை நடிக்கத் தகுதிவாய்ந்த ஆணழகனைத் தேடித் தமிழ் நாடெங்கும் சுற்றிவந்த டைரக்டர் ஆசாரியா விஜயகுமாரைப்பற்றி கேள்விப்பட்டார். விஜயகுமாரின் நண்பர்களில் ஒருவராகிய ஸ்ரீ பிச்சைமுத்துக் கோனாருக்கு டைரக்டர் ஆசாரியாவைத் தெரியும். அவர்தான் முதலில் விஜயகுமாரைப்பற்றி டைரக்டர் ஆசாரியாவிடம் பிரஸ்தாபித்தார்.

விஜயகுமாரை நேரில் கண்டதுமே டைரக்டர் ஆசாரியாவுக்குப் பிடித்துப் போய்விட்டது. அதிலும் "வனிதா மணியே" என்ற பாட்டை அழகிய பிர்க்காக்களுடன் கணீரென்ற குரலில் விஜயகுமார் பொழிந்து தள்ளியதும் டைரக்டர் ஆசாரியாவின் கொஞ்சநஞ்ச சந்தேகமும் பறந்தோடி விட்டது. ஓசைப்படாமல் விஜயகுமாரைக் "கடக"த்திற்காக ஒப்பந்தம் செய்து கொண்டுவிட்டார்.

டி. சூர்யகுமாரியும் விஜயகுமாரும் சேர்ந்து நடித்த

"கடகம்" சுமாரான வெற்றியைப் பெற்றது. அந்த முதல் படத்தின் மூலமே முன்னுக்கு வரக் கூடிய இளம் நக்ஷத்திர கோஷ்டியில் விஜயகுமாரும் இடம் பெற்றுவிட்டார்.

தற்பொழுது விஜயகுமார் பாரதி பிக்சர்ஸாரின் "மின் மினி"யிலும் "அம்பிகா தேவி"யிலும் நடித்துவருகிறார். "மின்மினி" புரட்சிகரமான நவீன சமூகப்படம். புரட்சி மனப்பான்மை வாய்ந்த ஒரு பத்திரிகாசிரியனைச் சுற்றிப் பின்னப்பட்டிருக்கும் ஒரு ரஸமான கதை. அதில் விஜய குமார் பத்திரிகாசிரியன் நவீனனாகத் தோன்றுகிறார். "மின் மினி" வெளி வந்ததும் விஜயகுமார் புகழேணியின் உச்சியை எட்டிப் பிடித்து ஜ்வலிக்கும் நக்ஷத்திரங்களி லொருவராகப் பிரகாசிப்பார் என்று தாராளமாகக் கூறமுடியும்.

ஆங்கிலப் படங்கள் என்றால் விஜயகுமாருக்கு அலாதி பிரியமுண்டு. எந்த ஆங்கிலப் படத்தையும் பார்க்கத் தவற மாட்டார். அதிலும் ஜான் ஹால், ஸ்பென்ஸர் டிரேஸி முதலிய ஆங்கில நடிகர்களின் படமென்றால் கேட்கவே வேண்டியதில்லை. தாம் பார்த்த ஆங்கிலப் படங்களில் "தி லேடி அப்ஜெக்ட்ஸ்", "மிஸஸ் மினிவர்" முதலிய படங்கள் தமக்கு மிகவும் பிடித்திருந்ததாக விஜயகுமார் கூறுகிறார்.

ஆங்கிலப் படங்களுக்கு அடுத்தபடியாக விஜயகுமா ருக்குப் பிடித்தமானது கிரிக்கெட் விளையாட்டு. அவருக்கே கிரிக்கெட் ஆடவும் தெரியும்.

விஜயகுமாருக்குத் தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய பாஷைகளில் நல்ல தேர்ச்சியுண்டு. ஹிந்தி பாஷையும் கற்றுக்கொண்டு வருகிறார். குதிரை சவாரி கற்றுக்கொள்ள வும் அவருக்கு ஆவலாயிருக்கிறதாம்!

சிலர் சினிமாவில் சேர்ந்தவுடனேயே சகலவித துர்ப் பழக்கங்களுக்கும் அடிமையாகி விடுகிறார்கள். ஆனால் விஜய குமார் இந்த ரகத்தைச் சேர்ந்தவரல்ல. வெற்றிலை பாக்குக் கூடப் போடமாட்டாரென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

1922-ம் வருஷம் ஜூலை மாதம் பத்தொன்பதாம் தேதி பிறந்த விஜயகுமாருக்கு உடன் பிறந்த சகோதரர்கள் யாரும் கிடையாது. அவரது இரண்டு சகோதரிகளில் ஒருவர்

மதுரையிலிருக்கிறார்; இன்னொருவர் கோயமுத்தூரிலிருக்கிறார்.

"வாழ்க்கையில் உங்களது லக்ஷியமென்ன? என்று விஜயகுமாரிடம் கேட்டேன்.

"சிறந்த நடிகன் என்று பெயர் வாங்குவதுடன் நல்ல குணவான் என்றும் பெயரெடுக்க வேண்டும். எந்தக் கெட்ட பழக்க வழக்கங்களுக்கும் இடம் கொடுக்கக்கூடாது. இது தான் எனது லட்சியம்," என்று கணீரென்று பதில்வந்தது.

சுமார் ஐந்தே முக்கால் அடி உயரமுள்ள விஜயகுமார் சிவந்த மேனியுடன் கம்பீரமாகத் தோற்றமளிக்கிறார். இத்துடன் நல்ல முகவெட்டும் சங்கீத ஞானம் வேறு சேர்ந்திருக்கிறது. எதிர்காலத்தில் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கப் போகிற நக்ஷத்திரங்கள் ஜாபிதாவில் விஜயகுமாரையும் அவசியம் சேர்த்தே தீரவேண்டும்.

# புளிமூட்டை ராமஸ்வாமி அய்யர்

பாருங்கள், இந்த உலகத்தில் எதுவும் நமது இஷ்டப்படி நடப்பதில்லை! நாம் நினைப்பது ஒன்று, நடப்பது வேறொன்றாகத்தான் இருக்கிறது. ஹாஸ்ய நடிகர் புளிமூட்டை ராமஸ்வாமி அய்யரின் வாழ்க்கையே இதற்கு ஓர் சிறந்த உதாரணம்.

இப்போது வெள்ளித்திரையில் பிரபல ஹாஸ்ய நடிகராகத் திகழும் புளிமூட்டை சிறுவயதில் ஒரு சங்கீத வித்வானாகப் புகழ்பெற வேண்டுமென்று மனக்கோட்டை கட்டி, அதற்காகச் சிரமப்பட்டு சாதகமும் செய்து கொண்டுவந்தார் என்றால் நீங்கள் நம்பமாட்டீர்கள்! ஆனால் இது உண்மைதான்.

திருநெல்வேலி ஜில்லா தூத்துக்குடியில் ஒரு ஏழைப் பிராமணரின் புதல்வராகப் புளிமூட்டை பிறந்தார். அவரது தகப்பனார் கோயில்பூஜை செய்து கொண்டிருந்தார். வீட்டில் அஷ்டதரித்திரம் தாண்டவமாடிக் கொண்டிருந்ததாம். புளிமூட்டைக்கு ஒரு சகோதரரும், இரு சகோதரிகளும் இருக்கிறார்கள். கோவில் பூஜைசெய்து வரும் வரும்படியிலிருந்து ஆறுபேரடங்கிய குடும்பத்தை சம்ரக்ஷிப்பதென்றால் எவ்வளவு தரித்திர தசையில் அந்தக்குடும்பம் இருந்திருக்கும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

புளிமூட்டைக்கு இரண்டுவயது நிரம்புவதற்குள் அவரது தாயார் இறந்து விட்டார். அவரது தந்தையுடன் பிறந்த அத்தைதான் தாயின் ஸ்தானத்தில் புளிமூட்டையை வளர்த்து வந்தார்.

எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையே தூத்துக்குடி எஸ். ஏ. வி. ஹைஸ்கூலில் இரண்டாவது பாரம்வரை ராமஸ்வாமி அய்யர் படித்தார். படித்துக்கொண்டிருந்த நாட்களில் சங்கீதத்தில் நல்லதேர்ச்சி பெற்று பிரபல சங்கீத வித்வானாக விளங்கவேண்டும் என்ற ஆர்வத்துடன் சங்கீதத்தையும் ஒரு கைபார்க்க ஆரம்பித்தார் புளிமூட்டை. அந்த நாட்களில் அவர் இனிமையாகப் பாடுவாராம். இவரது பாட்டைக் கேட்டு சங்

தோஷமடைந்த கல்லூர் கிருஷ்ண பாகவதர் என்ற சங்கீத வித்வான் இவருக்கு பிடில் கற்றுக் கொடுக்க முன்வந்தார். பள்ளிக்கூடப் படிப்புடன் பிடில் வாசிக்கவும் கற்றுக்கொண்டு வந்தார் புளிமூட்டை.

இந்த சந்தர்ப்பத்தில் பிரசித்திபெற்ற கன்னையா நாடகக் கம்பெனியார் தூத்துக்குடிக்கு விஜயம் செய்து "தசாவதாரம்" நாடகத்தை ஆடிவந்தார்கள்.

புளிமூட்டையின் வீட்டிற்கு அடுத்த வீட்டில் காலஞ் சென்ற எஸ் ஜி. கிட்டப்பாவின் ஷட்டகர் வசித்து வந்தார். அவர் புளிமூட்டையையும் "தசாவதார" நாடகத்திற்கு அழைத்துச் சென்றார்.

கன்னையா கம்பெனியாரின் "தசாவதார"த்தைப் பார்த்ததும் புளி மூட்டையின் மனதில் பெரிய புரட்சியே ஏற்பட்டு விட்டது. நாடகக்கலை அவரை உடனேயே கவர்ந்து விட்டது. சங்கீத வித்வானாகும் அபிலாஷைக்கு அன்றே புளிமூட்டை முற்றுப்புள்ளி வைத்து விட்டார். அதற்குப் பதிலாக எப்படியாவது நாடக நடிகராக வேண்டும் என்ற ஆசை அவரது உள்ளத்தில் குடிகொண்டது.

அதேசமயத்தில் டி. கே. எஸ். பிரதர்ஸ் நாடகக் கம்பெனியின் மானேஜராக இருந்த காமேஸ்வர ஐயர் சொல்லிவைத்தாற்போல் தூத்துக்குடிக்கு வந்து சேர்ந்தார். புளிமூட்டையின் பாட்டைக் கேட்டதும், "அடே, நீயும் டிராமாவில் நடிக்கலாம்! எங்கள் கம்பெனி இப்பொழுது கரூரில் இருக்கிறது. அங்கே வந்து என்னைப்பார்த்தால் உன்னையும் கம்பெனியில் சேர்த்துக் கொள்கிறேன்," என்று அவர் புளிமூட்டையின் ஆசைக்குத் தூபம் போட்டார்.

பார்த்தார் புளிமூட்டை! கரூருக்குப் போய் நாடகக் கம்பெனியில் சேர்ந்து விடுவது என்று முடிவு செய்தார்.

ஆனால் கரூருக்குப் போகப் பணம் வேண்டுமே, அதற்கென்ன செய்வது? இந்தக் கேள்விக்குப் பதில் கண்டுபிடிக்கப் புளிமூட்டைக்கு அதிக நேரமாகவில்லை. இரவோடிரவாகத் தகப்பனாரின் பெட்டியைத் திறந்தார். அதில் நாற்பத்தைந்து ரூபாயிருந்தது. விள்ளாமல் விரியாமல் நாற்பத்தைந்து ரூபா

யையும் 'அபேஸ்' செய்தார்; தமது பிடிலையும் எடுத்துக் கொண்டு ஓசைப்படாமல் கரூருக்குப் புறப்பட்டு விட்டார்!

கரூர் சென்ற அவர் டி. கே. எஸ். சகோதரர்களைச் சந்தித்து தம்மையும் அவர்களது நாடகக் கம்பெனியில் ஒரு நடிகனாகச் சேர்த்துச் கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். புளிமூட்டையின் பாட்டுகளைக்கூடக் கேட்காமல் இவரை அவர்கள் முதலில் நிராகரித்து விட்டார்கள்.

அவர் மனமுடைந்து திரும்ப எத்தனிக்கையில் டி. கே. எஸ். சகோதரர்களில் ஒருவராகிய டி. கே. முத்துசாமி "பையனைப் பாடச்சொல்லிப் பார்க்கலாமே!" என்றார். உடனே அவிழ்த்து விட்டாரய்யா தமது சரக்கை ராமஸ்வாமி ஐயர்! அவரது பாட்டு டி. கே. எஸ். சகோதரர்களுக்குப்பிடித்துப் போய்விட்டது. அன்றே அவர்களது கம்பெனியில் அவர் சேர்த்துக் கொள்ளப்பட்டார். சம்பளம் எவ்வளவு என்று கேட்கிறீர்களோ? மாதம் முழுதாக மூன்று ரூபாய்கள்!

டி. கே. எஸ். நாடகங்களில் அவர் ஹாஸ்ய நடிகராக நடிக்கவில்லை. எமன், கடோத்கஜன், இராவணன், இரணியன், பீமன், மயில்ராவணன், போன்ற முரட்டு வேஷங்கள்தான் அவருக்குக் கொடுக்கப்பட்டு வந்தன. பயங்கர பாத்திரங்களை நடிப்பதில் அவருக்கு நல்ல பெயர் உண்டாயிற்று.

என். எஸ். கிருஷ்ணன் அப்பொழுது டி. கே. எஸ். சகோதரர்களுடன்தான் இருந்து வந்தார். முதன் முதலில் புளிமூட்டை நாடகமேடையில் கடோத்கஜன் வேஷத்தில் தோன்றினார். இவருக்கு கடோத்கஜன் பாகத்தை நடிக்கக் கற்றுக்கொடுத்த குருவும் என். எஸ். கே. தான். "நாடக உலகிலும் சரி, பேசும்பட உலகிலும் சரி, எனக்கு குரு ஸ்ரீ. என். எஸ். கே. தான்," என்று கர்வத்துடன் கூறுகிறார் அவர்.

டி. கே. எஸ். சகோதரர்களின் நாவல்—நாடகங்களில் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேஷத்தில் அவர்தான் தோன்றுவார். டி. கே. எஸ். சகோதரர்களும் அவருக்குக் கூடுமானவரை அதிக சந்தர்ப்பம் கொடுத்து நடிப்புத் துறையில் அவருக்கு ஊக்கமளித்து வந்தார்களாம்.

டி. கே. எஸ். சகோதரர்களுடன் அவர் ஆறு வருஷம் தொடர்ந்து சேவை செய்தார். அந்தக் கம்பெனியில் இவர்

அதிகமாக வாங்கிய சம்பளம் மாதம் முப்பத்தைந்து ரூபாய் தான்.

அதற்குப் பிறகு கோல்டன் கம்பெனி சாரதாம்பாள் டி. கே. எஸ். நாடக சபாவையும் ஒப்பந்தத்திற்கு எடுத்து ஒரு வருஷம் நடத்தினர். பிறகு அவர் விவேகானந்தா நாடக சபா என்று தனியாக ஒரு நாடகசபையை ஸ்தாபித்துக்கொண்டு பிரிந்து விட்டார். டி. கே. எஸ். சகோதரர்கள் நடிப்பதை விட்டுவிட்டு சொந்த ஊருக்குத் திரும்பி விட்டனர். ஆகவே புளிமூட்டை, என். எஸ். கே. முதலியவர்கள் விவேகானந்தா நாடக சபையிலேயே சேர்ந்து நடித்து வரலாயினர். ஆனால் இந்தக் கம்பெனி சொல்லாமல் கொள்ளாமல் 1936-ம் வருஷம் கொல்லத்தில் 'திவால்' ஆகிவிட்டது!

அதே வருஷத்தில் என். எஸ். கே. "சதி லீலாவதி"யில் நடிப்பதற்காகச் சென்னைக்குச் சென்றார். தனித்து விடப் பட்ட புளிமூட்டை மதுரை ஒரிஜினல் மீனலோசனி பால சற்குண சபா என்ற நாடக சபையில் சேர்ந்து அவர்களுடன் 1937ம் வருஷம் இலங்கைக்குச் சென்று நாடகங்களில் நடித்தார். இலங்கைத்தீவில் இவர் பார்க்காத இடம் கிடையாது; நாடகமாடாத ஊர் கிடையாது. சுமார் இரண்டு வருஷங்கள் இலங்கையில் நாடகமாடி விட்டு 1939ம் வருஷம் டிசம்பர் மாதம் தமது மனைவியுடன் இந்தியா திரும்பினர் புளிமூட்டை.

இலங்கையில் நாடகமாடிக் கொண்டிருந்த பொழுது புளிமூட்டைக்கு மாதச்சம்பளம் ரூபாய் அறுபத்தைந்து. இதில் அவரும், அவரது மனைவியும் காலக்ஷேபம் செய்ய வேண்டியிருந்தது. ஆகவே கையில் கால் காசு இல்லாமல் அவர்கள் இந்தியா திரும்பியதில் ஆச்சரியமில்லை.

கையில் பணமில்லாதது மட்டுமல்ல. தம்பதிகளிருவரும் மலேரியா ஜுரத்தால் அவதிப்பட்டுக்கொண்டே இந்தியா வந்து சேர்ந்தார்கள்! இந்த உலகில் துன்பம்தான் தனித்து வருவதில்லையே! கையில் ஒரு காசுமில்லாமல், மலேரியா ஜுரத்தால் புளிமூட்டை பீடிக்கப்பட்டுக்கொண்டிருந்த அதே சமயத்தில் அவரது தகப்பனரும் மரணமடைந்தார்! அதிலிருந்து மூன்று மாதங்கள்—அதாவது

1937ம் வருஷம் மார்ச் மாதம் வரை புளிமூட்டை பட்ட கஷ்டங்களுக்குக் கணக்கேயில்லை!

இனி எப்படிப் பிழைப்பை நடத்துவது என்று புளிமூட்டை திணறிக் கொண்டிருக்கையில் திடீரென்று அவரது மனைவி சமய சஞ்சீவியாக ஒரு யோசனை கூறினார். "உங்கள் சினிகிதர் என். எஸ். கே. சினிமாவில் பிரபல நடிகராகப் புகழுடன் விளங்குகிறாரே. சென்னைக்குப் போய் அவரைப் பார்த்தால் உங்களுக்கும் அவர் ஒரு வழி காட்டாமலா போவார்?" என்று.

இந்த யோசனையைப் புளிமூட்டையும் ஆமோதித்தார். ஆனால் யோசனை காரியத்தில் நிறைவேறப் பணம் வேண்டுமே! அந்தப் பிரச்னையையும் அவரது மனைவியே தீர்த்து விட்டார். "இந்த வளையல்களை விற்று அந்தப் பணத்துடன் சென்னைக் குப் போய் என். எஸ். கே. யைப் பாருங்கள்" என்று தமது கடைசி இரண்டு தங்க வளையல்களையும் கழற்றித் தனது கணவனிடம் கொடுத்தார் அந்த மாதுசிரோன்மணி! இதைப் பெருமிதத்துடன் சொல்லிக் கண்ணீர் விடுவார் புளிமூட்டை. அது ஆனந்தக்கண்ணீரா, துக்கக்கண்ணீரா என்று சொல் லுங்கள் பார்க்கலாம்!

அந்த வளையல்களை விற்று முப்பது ரூபாய் பணத்துடன் சென்னைக்கு வண்டியேறினார் புளிமூட்டை. சென்னை வந்து தேடித் தேடிப் பார்த்தும் என். எஸ். கே. கண்ணில் தட்டுப் படவில்லை! இந்த லக்ஷணத்தில் திருவல்லிக்கேணியில் ஒரு கடை வராந்தாவில் தமது பெட்டியையே தலையணையாக வைத் துக்கொண்டு புளிமூட்டை இரவில் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுது யாரோ ஒரு மகானுபாவன் அவரது பெட்டியை அபேஸ் செய்து விட்டான். புளிமூட்டை எழுந்து பார்த் தால் பெட்டியைக் காணோம்! அதில்தான் அவரது துணிமணி களும், ரூபாயும் இருந்தன. எல்லாவற்றையும் பறிகொடுத்து விட்டு மறுபடியும் புளிமூட்டை ஓட்டாண்டியாகி விட்டார்!

மறுநாள் இவரது பரிதாபகரமான கதையைக் கேட்ட கிருஷ்ணய்யர் என்ற ஹோட்டல் முதலாளி இவருக்கு இனாமாகச் சாப்பாடு போட்டார். நிம்மதியாகச் சாப்பிட்டுவிட்டு சாந்தோம் பீச்சில் போய் உட்கார்ந்தார் புளிமூட்டை.

மனிதன் துன்பத்தின் எல்லைவரை அனுபவித்த பிறகு தான் சுகம் கிடைக்கிறது. மனமுடைந்து ஏங்கி புளிமூட்டை உட்கார்ந்திருக்கையில் அந்த வழியாக ஒரு மோட்டார் கார் போயிற்று. பக்கத்திலிருந்த ஜனங்கள், "அதோ என். எஸ். கிருஷ்ணன் போகிறார்," என்று பேசிக்கொண்டது அவர் காதில் விழுந்தது. அவ்வளவுதான், அந்த மோட்டாரையே பின்பற்றி ஓட ஆரம்பித்தார் அவர்! கடைசியில் மோட்டார் போய் நின்ற வீட்டில் விசாரித்ததில் அது என். எஸ். கேயின் வீடுதான் என்று தெரியவந்தது. எல்லையற்ற மகிழ்ச்சியுடன் உள்ளே நுழைந்தார்.

அவரைக் கண்டதும் என். எஸ். கே.க்கு சந்தோஷம் தாங்கவில்லையாம்! அப்படியே அவரைக் கட்டிக்கொண்டு விட்டாராம்!

பரஸ்பரம் க்ஷேமலாபங்கள் விசாரித்த பிறகு புளிமூட்டை சென்னைக்கு வந்த காரணத்தை என். எஸ். கே. கேட்டார்.

"அசோகா பில்ம்ஸ் என்று நீங்க ஒரு பில்ம் கம்பெனி ஆரம்பிச்சிருக்கேளாம். நானும் இப்போ ஒரு வேலையு மில்லாம கஷ்டப்படறேன். உங்க கம்பெனியிலே சமையல் காரன் வேலை கொடுத்தா ரொம்ப உதவியா இருக்கும்," என்று மென்று விழுங்கிக்கொண்டே ஆரம்பித்தார் புளி மூட்டை.

இதைக்கேட்டதும் என். எஸ். கே. கண்ணீர் விட்டுக் கதறி விட்டாராம்! "நீயும் ஒரு நடிகனாயிருக்கிற பொழுது சமையல் வேலை ஏனப்பா செய்யவேண்டும்?" என்றெல்லாம் சொல்லி அவர் ஆறுதலளித்தாராம்.

பிறகு அவர் கையில் இருபத்தைந்து ரூபாய் கொடுத்து அவரைக் கோயமுத்தூர் ஸென்ட்ரல் ஸ்டுடியோவுக்கு ஒரு வேலையாள் சகிதமாக அனுப்பி வைத்தார் என். எஸ். கே.

"அன்று என். எஸ். கே. யைப் பார்த்தது முதல் நாளது தேதி வரை எனக்கு யாதொரு குறைவுமில்லை. சந்தோஷமாக வாழ்க்கை நடத்தி வருகிறேன். இன்று நான் சாப்பிடும் சாப்பாடு அந்த மகானுபாவன் என். எஸ். கே. யின் சாப்பாடு தான். இன்று நானும் ஒரு ஹாஸ்ய நடிகன் என்று பெயர்

வாங்கியிருக்கிறேன். அந்தப் பெருமை முழுவதும் என். எஸ். கே. க்குத்தான் சேரவேண்டும்,” என்று கண்ணீர் ததும்ப, கத்கத ஸ்வரத்தில் கூறுகிறார் அவர்.

புளிமூட்டை முதன் முதலாக என். எஸ். கே. யுடன் “பரசுராமர்” படத்தில் நடித்தார். அதைத் தொடர்ந்து “நவீன விக்கிரமாதித்தன்,” “இருநண்பர்கள்,” “பூலோக ரம்பை,” ‘உத்தமபுத்திரன்’ ‘மணிமேகலை,’ ‘அலிபாபா’ முதலிய 33 படங்களில் என். எஸ். கே. யுடன் புளிமூட்டையும் நடித்திருக்கிறார்.

வெள்ளித்திரையில் அவர் தோன்றினாலே போதும். ஜனங்கள் சீழ்க்கையடித்துக் கைதட்டி ஆரவாரம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவிக்கத் தவறுவதில்லை.

“ஆமாம், உங்களுக்குப் புளிமூட்டை என்ற பட்டப்பெயர் கொடுத்தது யார்? மகாஜனங்களே பார்த்துக் கொடுத்து தானா?” என்று கேட்டேன்.

“அதுவும் என். எஸ். கே. எனக்குச் சூட்டிய பெயர் தான்! ‘அலி பாபா’ படத்தில் என்னை அவர் ‘டேய், புளி மூட்டை!’ என்று கூப்பிட்டார். அந்தப் பெயரே எனக்கு நிலைத்தும் விட்டது! அந்தப் படத்திலிருந்து ரசிகர்கள் என்னைப் புளிமூட்டை என்றே அழைக்க ஆரம்பித்து விட்டார்கள்!” என்று பெருமையுடன் பதில் கூறினார் புளிமூட்டை.

லக்ஷ்மிகாந்தன் கொலையுண்டது சம்பந்தமாக என். எஸ். கே. கைது செய்யப்படும் வரை புளிமூட்டை அவருடன் சேர்ந்தேதான் நடித்து வந்தார். என். எஸ். கே. நடிக்காத படங்களில் இவர் நடிப்பது கிடையாது.

என். எஸ். கே. கைது செய்யப்பட்டதும் அவரது என். எஸ். கே. நாடகசபாவில் புளிமூட்டை சேர்ந்து ஆறுமாதங்கள் நடித்து வந்தார். அதன் பின்னர் என். எஸ். கே. யின் அனுமதியுடன் மற்ற படங்களில் நடிக்க ஆரம்பித்தார்.

என். எஸ். கே. விடுதலையானதும் அவருடன் ‘விசுவாமித்ரா’ படத்தில் புளிமூட்டையும் சேர்ந்து நடித்தார். “நல்ல தம்பி”யிலும் அவர் என். எஸ். கே. யுடன் சேர்ந்து நடிக்கிறார்.

"நல்ல தம்பி"யில் புளிமூட்டையின் பாட்டையும் ரசிகர்கள் கேட்கலாம்!

இதைத்தவிர "ஞான சவுந்தரி," "பில்ஹணன்", "அபிமன்யு," "ராஜயோகி," "கிருஷ்ண பக்தி," "ஜீவகன்," "லாவணி," "சுதர்சன்," "அங்கயற்கண்ணி," "மதுரை வீரன்," முதலிய படங்களில் புளிமூட்டை தற்சமயம் நடித்து வருகிறார். ஜெமினி "ஔவையா"ரிலும் அவர் நடிக்கலாம்.

1912-ம் வருஷம் ஜூன் மாதம் பிறந்த புளிமூட்டை ராமஸ்வாமி அய்யருக்கு அவரது பதினறுவது வயதிலேயே விவாகமாகி விட்டது. அவரது ஒரே புதல்வன் மூன்று வயதுக் குழந்தையாயிருக்கும் பொழுதே இறந்து விட்டான். தற்சமயம் அவருக்குக் குழந்தைகள் எதுவுமில்லை.

புளிமூட்டையின் சகோதரிகளில் ஒருவர் ராமநாதபுரம் ஜில்லா சிவகாசியில் இருக்கிறார். புளிமூட்டை இலங்கையிலிருந்து காலணு காசு இல்லாமல் திரும்பி வந்த நாட்களில் அவரையும், அவரது மனைவியையும் இந்த சகோதரிதான் அன்னமளித்து ஆதரித்தாராம். நன்றி மறவாத புளிமூட்டை இந்த சகோதரியின் குடும்பத்திற்கு இன்றும் பண உதவி செய்து வருகிறார்.

இவரைச் சிறுவயதில் வளர்த்த அத்தை இப்பொழுது திருநெல்வேலி ஜில்லா பாபநாசத்தில் இருக்கிறார். அவருக்கு பாபநாசத்திலேயே புளிமூட்டை ஒரு வீடு வாங்கிக் கொடுத்திருக்கிறார்.

நன்றி மறப்பது என்பது புளிமூட்டையின் அகராதியிலேயே இல்லை. முக்கியமாக என். எஸ். கே. தனக்குச் செய்த உதவி பற்றிக் கூறும்பொழுது புளிமூட்டை கண்ணீர் சொரிவார்.

யாரையும் பகைத்துக் கொள்ளும் சுபாவம் புளிமூட்டையிடம் கிடையாது. இயற்கையாகவே தயாள குணம் நிரம்பியவர்.

புளிமூட்டை ராமஸ்வாமி அய்யர் நெடுநாள் வாழ்ந்து தமது ஹாஸ்ய நடிப்பின் மூலம் தமிழ் மக்களைச் சிரிக்க வைத்துக்கொண்டே யிருக்கவேண்டும் என்பதே எனது ஆவல்.

# டி. எஸ். துரைராஜ்

“இவரு சொன்னு சொன்னதுதான். எவரு? இவரு!”— இந்த சினிமாமூல வாக்கியம் ஒரு காலத்தில் தமிழ்ப்பட ரஸிகர்களின் தாரக மந்திரமாக இருந்தது. ஏன், இப்பொழுது கூட “எவரு? இவரு”வுக்கு இருந்த மவுஸ் குறைய வில்லை என்றே சொல்லலாம்.

இதைவிடப் பிரஸித்தி பெற்ற இன்னொரு சினிமா மூல வாக்கியமும் இருக்கத்தான் செய்கிறது. இரண்டு மூன்று வருஷங்களுக்கு அந்த வாக்கியம் தமிழ்ப்பட ரஸிகர்களின் உதடுகளிலிருந்து சமயசந்தர்ப்பமெதுவும் பாராமல் அனுயாஸமாக வெளிவந்து கொண்டிருந்தது. அந்த மூலவாக்கியம் என்ன வென்று உங்களால் சொல்ல முடியுமா?

ஆம், நீங்கள் நினைப்பது சரிதான். எம். எஸ். சுப்புலக்ஷ்மி நடித்த “சகுந்தலை”யில் “அடிப்பியோ? நொப்பன் மவனே! சிங்கண்டா!” என்று சிங்கம் துரைராஜ் கனஜோராக ஆரம்பித்து வரவர சுருதி குறைந்து ஈன ஸ்வரத்தில் அழ ஆரம்பித்தாரே, அந்த “சிங்கண்டா”வைத்தான் நானும் குறிப்பிடுகிறேன்.

தமிழ் “சகுந்தலை”யில் என். எஸ். கிருஷ்ணனும் டி. எஸ். துரைராஜூம் தோன்றும் ஹாஸ்ய கட்டம் மிகவும் ரஸம் நிறைந்த கட்டம். அதைச் சுவையுள்ளதாக ஆக்கிய பெருமையில் பெரும் பங்கு டி. எஸ். துரைராஜூக்கே சேர வேண்டும்.

“அடிப்பியோ? நொப்பன் மவனே! சிங்கண்டா!” என்று அடிபட்டு அழும்பொழுது கூட அழுகுரலில் துரைராஜ் கூறிக்கொண்டே இருந்தார். தோல்வி வந்த சமயத்திலும் தோல்வியை அவர் ஒப்புக் கொள்ளவில்லை!

வாழ்க்கையிலும் துரைராஜின் குணம் அதுதான். தோல்வியை ஒரு நாளும் ஒப்புக்கொள்ள மாட்டார். தோல்வி மனப்

பான்மை அவரிடம் எட்டிக்கூடப் பார்க்க முடியாது. வாழ்க்கையில் துக்ககரமான சம்பவங்களைப்பற்றிப் பேசும் போதுகூட ஒருவித அலட்சியப் புன்சிரிப்புடன் பேசும் சுபாவமுடையவர்.

"சிரித்துக் கொழு" என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருக்கிறது. ஆனால், "சிரித்து வாழ்" என்கிறார் துரைராஜ். சிரிக்காதவனுடைய, சிரிக்க முடியாதவனுடைய வாழ்க்கை வாழ்க்கையல்ல என்பது துரைராஜின் சித்தாந்தம்.

டி. எஸ். துரைராஜ் 1910-ம் வருஷம் தஞ்சாவூரில் பிறந்தார். அவரது தகப்பனார் தஞ்சாவூரில் வக்கீல் குமாஸ்தா உத்தியோகம் பார்த்து வந்தார்.

துரைராஜ் ஏழு வயதுச் சிறுவனாயிருந்த பொழுது அவரது மூத்த ஸகோதரிகளிருவருக்கும் விவாகம் நடந்தது. ஸகோதரிகளின் கணவர்கள் மதுரையில் இருந்தனர்.

துரைராஜின் தாயாருக்குத் தனது புதல்விகள் மீது அபார வாஞ்சையுண்டு. அவர்களைப் பிரிந்திருக்க அவரால் முடியவில்லை. தனது புதல்விகளருகிலேயே தானும் இருக்க வேண்டுமென்று துரைராஜின் தாயார் தீர்மானித்து மதுரையில் குடியேறினர்.

மதுரையில் குடியேறியதும் புதல்வன் துரைராஜைப் படிக்கவைக்கும் பிரச்னை எழுந்தது. நல்ல நாள் பார்த்து துரைராஜை ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்த்தார்கள். ஆனால் நாள் நல்லதென்று சொன்ன ஜோஸ்யரைப் பொய்யராக்கி விட்டார் துரைராஜ்! பள்ளிக்கூடத்தில் சேர்ந்த மூன்றாம் நாளேபள்ளிக்கூடம் போகாமல் சண்டித்தனம் செய்ய ஆரம்பித்தார். அதைப் பார்த்த பெற்றோர்கள் அவரை மற்றொரு பள்ளிக்கூடத்தில் சேர்த்தனர். அங்கேயும் துரைராஜ் டிமிக்கி கொடுக்கலானார். இப்படியாக சுமார் இருபத்தி இரண்டு பள்ளிக்கூடங்களில் துரைராஜ் சேர்க்கப்பட்டார். ஆனால் எல்லாப் பள்ளிக்கூடங்களுக்கும் துரைராஜ் கடுக்காய் கொடுத்துவிட்டு குஷாலாக ஊர் சுற்ற ஆரம்பித்தார். அவரது பெற்றோர்களுக்கு அவர் ஒரே குமாரராயிருந்தபடியால் அவர்களும் அவரைக் கண்டிக்காமல் விட்டு விட்டனர்.

அப்பொழுது துரைராஜ் வசித்துவந்த தெருவில் ஸ்ரீலஸ்ரீ டி. டி. சங்கரதாஸ் ஸ்வாமிகளின் நாடகக் கம்பெனி ஆரம்

பிக்கப்பட்டது. நாடகக் கம்பெனிக்கு எதிரேயிருந்த வெற்றிலை பாக்குக் கடையில் துரைராஜ் அடிக்கடி நின்று அரட்டையடித்துக்கொண்டிருப்பார். அந்த நாட்களில் துரைராஜ் ஆளழகனுயிருப்பார். நன்கு பாடவும் தெரியும்.

நாடகக் கம்பெனி முதலாளியின் திருஷ்டி துரைராஜ் மீது விழுந்தது. பையன் நாடகங்களில் நன்கு சோபிப்பான் என்று அவருக்குப் பட்டது. உடனே துரைராஜின் பெற்றோர்களை அணுகிப் பேச்சுவார்த்தைகள் தொடங்கினர். முடிவில் மாதம் பத்துரூபாய் சம்பளத்தில் நாடக நடிகராக துரைராஜ் சேர்த்துக் கொள்ளப்பட்டார.

பள்ளிக்கூடம் போகும் தொல்லையைவிட நாடகத்தில் நடிப்பது தமாஷாக இருந்தது துரைராஜுக்கு. குஷாலாக நடிக்க ஆரம்பித்தார்.

முதன் முதலாக "சத்தியவான் சாவித்திரி" நாடகத்தில் பபூன் ஸுமாலியாக துரைராஜ் நடித்தார். அப்பொழுது அவருக்கு வயது ஒன்பது. அதன் பின்னர் பல நாடகங்களில் லலிதாங்கி, இடைச்சி, குறத்தி முதலிய பல வேஷங்களில் தோன்றி நடித்தார். ஆனல் முதலில் தோன்றிய காமிக் பாத்திரமே அவருக்குப் பிடித்திருந்தது. ஆகவே ஹாஸ்ய நடிப்பில் தீவிரமாக ஈடுபட்டார்.

ஸ்ரீலஸ்ரீ. சங்கரதாஸ் ஸ்வாமிகளின் நாடகக் கம்பெனியில் ஹாஸ்ய நடிகராக துரைராஜ் பதினேழு வருஷங்கள் வேலை செய்தார். பிறகு தமது 26-வது வயதில் அந்த நாடகக் கம்பெனியை விட்டு விலகி, "மதுரை ஒரிஜினல் மணிவாசக பால்ய ஸபா" என்ற நாடகக் கம்பெனியை சொந்தத்தில் ஆரம்பித்தார்.

இந்த நாடகக் கம்பெனி சுமார் மூன்று வருஷகாலம் அமோகமான பொது ஜன ஆதரவுடன் நடந்து வந்தது. பொள்ளாச்சி, தாராபுரம், மேட்டுப்பாளையம், கள்ளிக்கோட்டை, திருச்சூர், கண்ணனூர், தலைச்சேரி, எர்ணுகுளம், கோயமுத்தூர், முதலிய இடங்களில் வெற்றிகரமாக நாடகங்கள் நடத்தி விட்டு இந்தக் கம்பெனி ஆலப்புழை வந்து சேர்ந்தது. அது வரை கம்பெனி லாபத்திலேயே நடந்து வந்

தது. ஆனல் ஆலப்புழை சென்ற நேரம் சரியாக இல்லை. அப்பொழுது ஆலப்புழையில் அடை மழை பொழிந்து கொண்டிருந்ததாம். "அடாது மழை பெய்தாலும் விடாது நாடகம் நடத்தப்படும்," என்று என்னதான் அமர்க்களமாக விளம்பரம் செய்தாலும் மழை காலத்தில் நாடகம் பார்க்க யார் வருவார்கள்? அதிலும் மலையாளத்து மழையில்! அவ்வளவுதான். நாடகக் கம்பெனிக்குத் தலைவலி பிடித்து விட்டது. நஷ்டத்திற்கு மேல் நஷ்டம் வரவே துரைராஜும் நாடகக் கம்பெனியைக் கலைத்து விட்டு சினிமாவில் நடிக்க ஆரம்பித்தார்.

துரைராஜ் முதல் முதலாக நடித்த படம் "பக்த நாம தேவர்". அதில் ஹாஸ்ய பாகத்தில் துரைராஜ் நடித்தார். அதன் பின்னர் "கிருஷ்ணன் தூது" படத்தில் நடித்தார். இந்தப் படம் அக்னி பகவானுக்கு இரையாயிற்று. மறுபடி எடுக்கப்பட்ட புதிய "கிருஷ்ணன் தூது" விலும் துரைராஜ் நடித்தார். பிறகு "ரம்பையின் காத"லில் விநோதகேசரியாக நடித்து ரஸிகர்களின் அமோகமான பாராட்டுதல்களைப் பெற்றார். அதற்குப்பிறகு "ஆனந்தாசிரம"த்திலும் "மாணிக்க வாசக"ரிலும் நடித்துவிட்டு "சகுந்தலை"யில் சக்கைப் போடு போட்டார். "சகுந்தலை" துரைராஜைப் புகழேணியின் உச்சிக்கே கொண்டு போய் விட்டாள் என்று கூறலாம். "திருநீல கண்ட"ரிலும் துரைராஜுக்கு நல்ல புகழ் கிடைத்தது. அதன் பின்னர் "பூலோகரம்பை," "ஆரவல்லி," "துளஸி ஜலந்தர்," "ஆயிரம் தலைவாங்கி அபூர்வ சிந்தாமணி," "தேவதாஸி," "காமவல்லி," முதலிய படங்களில் நடித்துப் பேரும் புகழும் பெற்றார்.

தற்போது துரைராஜ் "பிழைக்கும் வழி" யில் முக்கிய கதாபாத்திரமாக நடித்து வருவதுடன் அதன் தயாரிப்பிலும் விசேஷ பங்கெடுத்து வருகிறார். இந்தப்படம் விரைவில் திரைக்குத் தயாராகி விடலாம்.

இதைத்தவிர "ஏழுமுடிமன்னன்" என்ற மற்றொரு படத்தையும் ஒரு தயாரிப்பாளருக்காகத் தயாரித்துக் கொடுத்திருக்கிறார்.

எம். ஆர். ஸ்வாமிநாதன், என். எஸ். கிருஷ்ணன் முதலியவர்கள் டிராமாக் கம்பெனி நாட்களிலேயே துரைராஜுக்குப்

பரிச்சயமானவர்கள். என். எஸ். கே. கோஷ்டியில் துரைராஜும் சிறிது காலமிருந்தார். துரைராஜ் படஉலகில் நுழைந்ததும் என். எஸ். கிருஷ்ணனுடன் தான். பின்னர் சொந்தக் காரணங்களுக்காக துரைராஜ் என். எஸ். கே. கோஷ்டியிலிருந்து விலகும்படி நேர்ந்தது.

தமிழ் சினிமா நக்ஷத்திரங்களில் துப்பாக்கி வைத்திருப்பவர் துரைராஜ் ஒருவர்தான் என்று நினைக்கிறேன். துப்பாக்கி லைஸன்ஸும் 'டபிள் பாரல்' துப்பாக்கி ஒன்றும் துரைராஜிடம் இருக்கின்றன. குறிபார்த்துச் சுடுவதில் அபார ஸாமர்த்தியம் வாய்ந்தவர். துப்பாக்கி ஸகிதமாக காட்டு மிருகங்களை வேட்டையாடுவதில் துரைராஜுக்கு அலாதி விருப்பமும் உற்சாகமும் உண்டு.

மோட்டார் ஓட்டுவது, நீந்துவது, குத்துச் சண்டை போடுவது, மல்யுத்தம் செய்வது எல்லாவற்றிலும் துரைராஜ் கைதேர்ந்தவர். தமிழும் மலையாளமும் நன்கு படித்தவர். ஆங்கிலமும் தெலுங்கும் சுமாராகத் தெரியும். சில மலையாள நாடகங்களில் கூட துரைராஜ் நடித்திருக்கிறார். "ஆரவல்லி" "காமவல்லி" "துளஸிஜலந்தர்" முதலிய படங்களில் ஹாஸ்யப்பகுதிகளுக்குத் தாமே வசனமும் பாட்டும் எழுதி நடிக்கவும் செய்திருக்கிறார் துரைராஜ்.

துரைராஜுக்கு அவரது இருபத்தி எட்டாவது வயதில் விவாகம் நடந்தது. ஒரு புதல்வனும் இரண்டு புதல்விகளும் இருக்கிறார்கள்.

பிள்ளை ஜாதியைச் சேர்ந்த துரைராஜுக்கு இப்பொழுது வயது முப்பத்தி எட்டாகிறது. ஐந்தேகால் அடி உயரமும் சிவந்த மேனியும் வாய்ந்தவர். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொள்ளும் சுபாவமுள்ளவர். வெள்ளை மனம் படைத்தவர். வேண்டாத தொல்லைகளையும் சென்ற கால நிகழ்ச்சிகளையும் நினைத்து வருத்தப்படும் குணம் அவரிடம் கிடையாது. ஸந்தோஷ புருஷர்; சுக ஜீவி.

"பிழைக்கும் வழி" மூலம் துரைராஜ் புகழ் வழியில் இன்னும் முன்னேறி விடுவார் என்று நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறேன்.

# 'ஜம்பம்' வி. குமார்

உலகப் புகழ்பெற்ற ஸ்வாமி விவேகானந்தர் சிறு பையனு யிருந்தபொழுது என்ன லக்ஷ்யத்துடன் இருந்தார் தெரியுமா? "எப்படியாவது சொந்தத்தில் குதிரை வண்டி ஒன்று வாங்கி 'ஜில் ஜில்' என்று வீதிகளில் ஓட்டிக்கொண்டு போக வேண்டும்," என்று விவேகானந்தர் கனவு கண்டு கொண்டிருந்தார். ஆனால் அவரது அபிலாஷை நிறைவேறவில்லை! "பெரிய வேதாந்தி; வேதாந்த சிம்மம்," என்றெல்லாம் அவர் உலகத்தோரால் புகழப்பட்டார். இருந்தாலும் சொந்தக் குதிரை வண்டியை 'ஹை, ஹை' என்று ஓட்டும் பாக்கியம் மட்டும் பாவம், அவருக்குக் கிடைக்கவே இல்லை!

இதே போலத்தான் உலகின் மற்றப் பெரியோர்களின் கதியும்! அவர்கள் நினைத்தது ஒன்று; நடந்தது வேறொன்று. ஸர். ஸி. வி. ராமனும் ராஜாஜியும் சிறு வயதில் எந்தக் குறிக்கோளுடன் வாழ்ந்து வந்தார்கள் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் காலம் ஒருவரை ராஜதந்திரியாகவும் இன்னொருவரை உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானியாகவும் மாற்றி விட்டது. அவர்களது பால்ய ஆசைகள் பூர்த்தியாகிவிட்டன என்று நாம் திட்டமாக கூறமுடியாது.

ஆனால் 'ஜம்ப' டைரக்டர் - நடிகர் வி. குமார் விஷயமே தனிதான். வாழ்க்கையில் அவர் கொண்ட லக்ஷ்யங்களில் பல பூர்த்தியாகிவிட்டன. பாக்கியிருப்பவை கட்டாயம் பூர்த்தியாகிவிடும் என்று உறுதியுடன் அவர் கூறுகிறார்.

'ஜம்பம்' குமார் சிறு பையனாக இருந்தபொழுது வெள்ளித் திரையில் தமது தலையும் தோன்றவேண்டும் என்று ஆசைப்பட்டார்; அந்த ஆசை நிறைவேறிற்று. நடிப்பில் புகழ் பெற வேண்டுமென்று விரும்பினார்; அந்த விருப்பம் பூர்த்தியாயிற்று. தமிழ்ப்பட டைரக்டராக வேண்டுமென்று கனவு கண்டார்; அந்தக் கனவும் 'ஜம்ப'த்தில் நனவாகிவிட்டது!

நாமொன்று நினைக்கத் தெய்வம் வேறொன்று நினைக்கும்

இந்த உலகில் குமார் நினைத்ததை தெய்வமும் நினைத்து அவரது ஆசைகளைப் பூர்த்தி செய்தது ஆச்சரியம்தானே?

திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த நாகர்கோவிலில் 1917-ம் வருஷம் ஏப்ரல் மாதம் குமார் பிறந்தார். அவரது முழுப்பெயர் வி. குமாரஸ்வாமி. அவரது தகப்பனுர் ஸ்ரீ வேலு முத்துப்பிள்ளை அப்பொழுது நாகர்கோவிலில் வக்கீல் வேலை பார்த்து வந்தார்.

குமார் நாகர்கோவில் எஸ். எல். பி. ஹைஸ்கூலில் சேர்ந்து படித்து ஸ்கூல் பைனல் பரீக்ஷையில் தேறினுர். மாணவராயிருக்கும்பொழுதே பள்ளிக்கூட நாடகங்களில் நடித்துப் பல மெடல்களும் பரிசுகளும் பெற்றுர். நடிப்பு, பாட்டு, சித்திரம் வரைதல் எல்லாவற்றிலும் குமாருக்கு பள்ளிக்கூடத்தில் நல்ல பெயர் இருந்துவந்தது. சர்க்கார் நடத்தும் சித்திரப் பரீக்ஷையிலும் குமார் தேறினுர்.

குமார் இரண்டாவது பாரத்தில் படித்துக் கொண்டிருக்கும்பொழுது நாகர்கோவிலுக்கு ஒரு சினிமா கம்பெனி வந்து சேர்ந்தது. 'ஸைலன்ட் சினிமா' காலம் அது. குமாரும் சினிமா பார்த்தார். அதைப் பார்த்ததும் அவர் ஒரு சங்கல்பம் செய்து கொண்டார். 'இந்த வெள்ளித் திரையில் நமது தலையும் ஒருநாள் தோன்றும்படி செய்ய வேண்டும்' என்ற ஸங்கல்பம்தான் அது.

பல வருஷங்களுக்குப் பிறகு இந்த சங்கல்பம் நிறைவேறிற்று. "மாலைக் கண்ண"னிலும் "சக்குபா"யிலும் குமார் தலையைக் காட்டிவிட்டார்! ஆனுல் அவைகளில் தோன்றியதற்கு அவருக்குப் பணம் எதுவும் கிடைக்கவில்லை! தமது சபதம் நிறைவேற வேண்டுமென்பதற்காகவே யாதொரு பிரதி பிரயோசனமுமின்றி இனுமாக குமார் அப்படங்களில் தலையைக் காட்டினுராம்!

ஆனுல் அவ்வாறு இனுமாகத் தலையைக் காட்டுவதற்குள் அவர் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. இரண்டாவது பார மாணவராயிருக்கும்பொழுதே குமார் இரண்டு நண்பர்களுடன் வீட்டைவிட்டு ஓடினுர். பம்பாய் சென்று அப்பொழுது ஸைலன்ட் படங்களில் புகழ் பெற்றிருந்த விட்டலைச் சந்தித்து அவர் மூலம் திரை உலகில் பிரவே

சிக்க வேண்டுமென்பது குமாரின் அப்போதைய திட்டம். இதற்காக அவர் வைத்திருந்த முதல் மூன்றே ரூபாய்கள். அதுவும் வீட்டிலிருந்து திருட்டுத்தனமாகக் கொண்டு வரப் பட்ட பணம்! ஆனால் அவரது திட்டம்தான் நிறைவேற வில்லை! திருநெல்வேலியில் அவரது உறவினர்கள் சிலர் அவரைப் பார்த்துவிட்டனர். அவர்கள் அவரது காதைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து தகப்பனாரிடம் மறுபடி சேர்த்துவிட்டார்கள்!

முதல் முயற்சி இவ்வாறு தோல்வியடைந்த போதிலும் சினிமாவில் நடிக்க வேண்டுமென்ற ஆசை குமாரின் மனதை விட்டு அகலவில்லை. சரியான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

குமார் ஸ்கூல்பைனல் பாஸ் செய்ததும் மேற்கொண்டு என்ன செய்வது என்ற பிரச்னை எழுந்தது. தன்னைப் போலவே தனது புதல்வனும் வக்கீல் வேலை பார்க்க வேண்டும் என்று ஸ்ரீ வேலுமுத்துப் பிள்ளை விரும்பினார். ஆகவே தொடர்ந்து படிக்கும்படி குமாருக்குப் புத்தி கூறினார். ஆனால் குமாரின் உள்ளம் சினிமா வானை நினைத்து ஏங்கிக் கொண் டிருந்தது.

"படித்தது போதுமப்பா. நான் சினிமாவில் சேர்ந்து நடிகனாகப் போகிறேன்," என்றார் குமார். அவரது தகப்பனா ருக்கு சினிமா என்றாலே பிடிக்காது. குமார் சினிமா நடிக னாவதை அவர் பலமாக எதிர்க்க ஆரம்பித்தார்.

"தகப்பனாரின் பிடிவாதத்தை எதிர்த்துப் போராட முடி யாது. வீட்டைவிட்டு வெளியேறினால்தான் நமது ஆசை பூர்த்தியாகும்," என்று குமாருக்குத் தெளிவாகத் தெரிந்தது. நள்ளிரவில் வீட்டைவிட்டு ஓசைப்படாமல் நழுவிவிட்டார். இடுப்பில் ஒரு கந்தல் வேஷ்டி. மேலே 'ட' போல் கிழிந்த ஒரு சட்டை. பதினைந்தணா பெறுமானமுள்ள ஒரு தகர ஸூட்கேஸ். இவைதான் அவரது அப்போதைய ஆஸ்தி.

இந்த விலை மதிப்பற்ற செல்வத்துடன் வீட்டைவிட்டு ஓட்டம்பிடித்த குமார் நேரே ராஜபாளையம் வந்து சேர்ந்தார்.

ராஜபாளையத்தில் வேலை பார்த்துவந்த தனது அண்ண

னுடன் சில நாட்கள் தங்கிவிட்டு அவரிடமிருந்து பதினைந்கு ரூபாய்களையும் சென்னை ஏ.எல். ஆர்.எம். கம்பெனிக்கு ஒரு கடிதத்தையும் வாங்கிக்கொண்டு சென்னைக்கு ரயிலேறினார் குமார்.

குமார் முதன்முதலாகச் சென்னை நகரில் காலடி எடுத்து வைத்தபொழுது அவர் கையில் முழுதாக ஆறு ரூபாய்கள் தான் இருந்தன. இந்த ஆறு ரூபாய்களுடன் சென்னை ஆதியப்ப முதலி தெருவிலிருந்த ஏ.எல். ஆர்.எம். கம்பெனிக்கு வந்து சேர்ந்தார். அவர்களது படமெதிலும் நடிக்க இவருக்கு சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. கம்பெனி வீட்டிலேயே ஒரு அறையிலிருந்து கொண்டு சினிமாவானில் தமக்கென ஒரு இடத்தைத் தேட குமார் முற்பட்டார்.

இப்பொழுது வீடாடல் 'ஞான சவுந்தரி'யை டைரக்ட் செய்த டைரக்டர் எப். நாகூர் அந்த நாட்களில் ஆர்ட் டைரக்டராக இருந்து வந்தார். குமாரின் தந்தையின் நண்பரொருவருக்கு டைரக்டர் நாகூரைத் தெரியும். அந்த நண்பர் மூலம் நாகூரைப் பேட்டி கண்டு தமக்கு சினிமாவில் நடிக்க ஒரு சான்ஸ் கொடுக்கும்படி குமார் கேட்டுக்கொண்டார்.

குமாரது விருப்பம் என்ன என்று தெரிந்ததும், "உனக்குப் பாடத் தெரியுமா?" என்று கேட்டார் நாகூர்.

"ஓ, தெரியும்," என்றார் குமார்.

"அப்படியானால் ஒரு பாட்டுப்பாடு. கேட்கலாம்," என்றார் நாகூர்.

தொண்டையைக் கனைத்துக்கொண்டு "சரவண பவா," பாட்டைப் பாடி முடித்தார் குமார். பாட்டைக் கேட்ட நாகூர் தமது அபிப்பிராயம் என்னவென்று சொல்லாமலே தம் கீழ் வேலை பார்த்துவந்த ஒரு பையனைப் பாடச் சொன்னார். அந்தப் பையனின் பாட்டைக் கேட்டவுடன்தான் தனது பாட்டு எவ்வளவு மட்டமானது என்பது குமாருக்குத் தெரியவந்தது! "தமிழ்ப் படங்களில் கதா நாயகனாக நடிக்க நமக்கு அருகதை யில்லை. ஆகவே ஹாஸ்ய நடிகனாக முயற்சிக்க வேண்டும்," என்று அந்த இடத்திலேயே முடிவு செய்தார் குமார்! ஆனால் தமது முடிவை நாகூரிடம் வெளியிட

அவருக்கு தைரியம் வரவில்லை. எனவே ஹாஸ்ய நடிகனுகும் யோசனையை வெளியிடாமல், "எனக்குச் சித்திரமும் நன்ருகத் தெரியும். என்னை ஆர்ட் அஸிஸ்டண்டாகவாவது எடுத்துக்கொள்ளுங்கள்," என்று நாகூரிடம் கேட்டார்.

உடனே நாகூர் குமாரை நியூடோன் ஸ்டுடியோ ஆர்ட் ஸெக்ஷனுக்கு அழைத்துச் சென்ருர். "உனது ஆர்ட் சினிமாவுக்குப் பயன்படாதப்பா," என்று சொல்லிக்கொண்டே ஆர்ட் ஸெக்ஷனை குமாருக்குக் காண்பித்தார் நாகூர். அங்கே ஆர்டிஸ்டுகளெல்லோரும் பாதாதிகேசம் செம்மண் மயமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தார்களாம்! அதைப் பார்த்த குமார் "இந்த ஆர்ட் நமக்கு வேண்டாம். நடிகனுக முயற்சிக்கலாம்," என்று முடிவு செய்தார். ஆனல் நடிகனுவதற்கு என்ன வழி என்றுதான் தெரியவில்லை.

ஆர்ட் டைரக்டர் நாகூர் எடிடிங் இலாகாவில் குமாரை வேலைக்கமர்த்தினுர். பில்ம்களைக் கழுவும் வேலை அவருக்குக் கொடுக்கப்பட்டது. தற்பொழுது பிரபலமடைந்திருக்கும் காமிராமேன் ஜிதன் பானர்ஜியின்கீழ்தான் குமார் வேலையை ஆரம்பித்தார்.

ஒரு நாள், "எனக்கு என்ன சம்பளம் போட்டிருக்கிறீர்கள் ?" என்று ஜிதனிடம் குமார் கேட்டார்.

"இந்த மாதத்திலிருந்தே சம்பளம் வேண்டுமென்ருல் மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் கொடுக்கிறேன். இல்லை, மூன்று மாதம் சம்பளமின்றி வேலை செய்வதாயிருந்தால் நான்காவது மாதத்திலிருந்து மாதம் பனிரெண்டு ரூபாய் சம்பளம் தரப்படும்," என்ருர் பானர்ஜி.

குமாருக்குப் பணம் அவசரமாகத் தேவையாயிருந்தது. ஒரு அணுவுக்குப் பொங்கல் வாங்கித் தின்றுவிட்டு நாள் முழுவதும் 'கம்'மென்றிருந்தே குமார் அப்பொழுது காலம் கழித்துவந்தார். மூன்று மாதங்கள் சம்பளமின்றி சேவகம் செய்வதென்பது முடியாத காரியம். மேலும் மூன்று மாதத்திற்குள் தொழிலில் தேர்ச்சியடைந்து பனிரெண்டு ரூபாய் சம்பளம் வாங்கத் தகுதிபெற்று விடலாம் என்ற நம்பிக்கையும் குமாருக்கு இருந்தது. ஆகவே ஐந்து ரூபாய் சம்ப

ளத்தை உடனடியாக அவர் ஏற்றுக்கொண்டார். அதற்கடுத்த மாதத்திலேயே அவரது சம்பளம் பனிரெண்டு ரூபாயாக உயர்த்தப்பட்டது. அதற்கடுத்த மாதம் குமார் பதினைந்து ரூபாய் சம்பளம் வாங்கினர்!

எடிடிங் ரூமிலிருந்து பிரிண்டிங் ரூமுக்கும் அங்கிருந்து லாபரடரிக்கும் தாவினர். லாபரடரியில் ஸ்ரீ. ஹரிகிருஷ்ண னின் கீழ் அவர் வேலை பார்த்துவந்தார். பின்னர் ஸ்ரீ. ஹரி கிருஷ்ணன் உயர்ந்த சம்பளத்தில் ஸரஸ்வதி ஸ்டோர்ஸில் வேலை ஏற்றுக்கொண்டதும் குமார் லாபரடரித் தலைவராகவே மாறிவிட்டார்.

இந்த சந்தர்ப்பத்தில்தான் "மாலைக் கண்ணன்", "அதிர்ஷ்டம்", "சக்குபாய்" ஆகிய படங்களில் யாதொரு பிரதி பிரயோசனமுமின்றி குமார் தலையைக் காட்டினர்!

அப்பொழுது என். எஸ். கிருஷ்ணனின் அசோகா பில்ம்ஸார் "கொழுக்கட்டை காமிக்" படமெடுக்க அங்கு வந்து சேர்ந்தனர். கிருஷ்ணனின் சிபாரிசின் பேரில் அந்தப் பட டைரக்டர் கே. எஸ். மணிக்கு உதவியாளராக குமார் வேலை செய்தார். "கொழுக்கட்டை காமிக்" படப் பிடிப்பு முடிந்ததும் அசோகா பில்ம்ஸார் கோயமுத்தூர் சென்றனர். அங்கே அவர்கள் தயாரித்த "புத்திமான் பலவான்" படத் திற்கும் உதவி டைரக்டராக குமார் வேலை செய்தார்.

'புத்திமான் பலவான்' தயாரானதும் குமார் தமது சொந்த ஊராகிய நாகர்கோவில் சென்று சிறிதுகாலம் தங்கி ஞர். பின்னர் சினிமாவில் நடிக்கும் நோக்கத்துடன் மறுபடி சென்னை வந்து சேர்ந்தார். அப்பொழுது சாதனு பில்ம்ஸார் சாது சுப்ரமண்ய யோகியாரின் டைரக்ஷனின் கீழ் "கிருஷ்ண குமார்" தமிழ்ப் படத்தைத் தயாரிக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். யோகியாரிடம் குமார் வேலை கேட்டார். அவர் சாக்குப் போக்குச் சொல்லி குமாரை அனுப்பிவிட்டார்.

உடனே குமார் பட முதலாளியையே அணுகித் தம்மை யும் ஒரு நடிகனுக்ச் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டார். முதலாளியும் மறுத்துவிட்டார். "நடிகன் வேலைதான் இல்லை. ஆர்டிஸ்ட் வேலையோ, எடிடர் வேலையோ ஏதாவது கொடுங்

கள்,'' என்று மன்றாடினார் குமார். முதலாளி அசையவில்லை. கடைசியில் குமாரின் தொந்தரவு பொறுக்க முடியாமல் உதவி டைரக்டர் பதவியை அவருக்குக் கொடுத்தார். பேர் தான் பெத்தபேர். ஆனால் சம்பளமென்னமோ மாதம் பத்து ரூபாய்கள்தான்!

அதே ஸாதனா பிலிம் கம்பெனியில் தமது வேலைத் திறமையால் மாதம் ஐநூறு ரூபாய் வரை குமார் சம்பளம் வாங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.

அதன் பின்னர் சா. து. சுப்ரமண்ய யோகியாரின் யோகி பிலிம்ஸ் தயாரித்த "ஆனந்தன்" தமிழ்ப் படத்தில் உதவி டைரக்டராக வேலை செய்தார். "ஆனந்த"னில் பிரதம காமடியனும் குமார்தான். அந்தப் படத்தில் கே. எஸ். ஆதிலக்ஷ்மியுடன் குமார் நடித்தார். இந்த ஜோடியின் ஹாஸ்ய நடிப்பு ரஸிகர்களின் பாராட்டுதல்களைப் பெற்றது.

"ஆனந்தன்" படப் பிடிப்புக்குப் பின்னர் குமார் மாடர்ன் தியேட்டர்ஸாரின் "திவான் பகதூ"ரிலும் "சௌ சௌ"விலும் ஹாஸ்ய பாகத்தில் நடித்தார்.

அதற்குப் பிறகு சா. து. சுப்ரமண்ய யோகி ஆரம்பித்த மீனாம்பிகா நாடக மண்டலியில் குமார் சேர்ந்து அத்துடன் இணைக்கப் பட்டிருந்த பரதாசிரமத்தில் பரத நாட்டிய முத்திரைகள் முழுவதையும் கற்றார். சிறிது காலத்திற்கெல்லாம் இந்த நாடகமண்டலி கலைக்கப்பட்டு விட்டது.

அப்பொழுது தேவி பிரசாத் நாராயண ராவ் என்பவர் பல கலைஞர்களுடன் உலகெங்கும் சுற்றப் போவதாகக் கேள்விப்பட்ட குமார் நாராயண ராவின் கோஷ்டியில் ஒரு அங்கத்தினராகச் சேர்ந்தார். அந்த கோஷ்டியிலிருந்ததால் குமாரின் நாட்டிய ஞானமும் அதிகரித்தது. நாராயண ராவ் கோஷ்டியினர் சென்னை வி. பி. ஹாலிலும், மியூஸியம் தியேட்டரிலும் நடத்திய நாட்டியக் கச்சேரிகளில் குமாரும் நாட்டியமாடியிருக்கிறார்.

கடைசியில் தேவி பிரசாத் கோஷ்டியை விட்டுவிட்டு கே. சுப்ரமண்யம் டைரக்ட் செய்த "விசித்ர வனிதா"வில் பிரதம ஹாஸ்ய பாத்திரமாகத் தோன்றி நடித்தார் குமார்.

"விசித்ரவனிதா"வில் குமாரின் ஹாஸ்ய நடிப்பு ரஸிகர்களின் பாராட்டுதல்களைப் பெற்றது.

அதன் பின்னர் "பங்கஜ வல்லி"யிலும் "மதனமாலா"விலும் பிரதம காமடியனாக நடித்தார். "மதனமாலா"வில் நடித்துக் கொண்டிருக்கும்பொழுது குகன் பிக்சர்ஸாரின் 'ஜம்ப'த்தில் கதாநாயகனாக நடிக்கக் குமார் ஒப்பந்தம் செய்யப் பட்டார். முன்பு குமார் வேலை பார்த்த அதே ஸாதனா பிலிம் முதலாளி ஸ்ரீ கந்தஸ்வாமி செட்டியார் தான் இந்தக் குஹன் பிக்சர்ஸின் முதலாளி என்பதை இங்கே குறிப்பிடவேண்டும்.

மற்ற தமிழ்ப் படங்களுடன் ஒத்திட்டுப் பார்த்தால் "ஜம்பம்" மிகக் குறைந்த செலவில் தயாரிக்கப்பட்ட படம் என்றுதான் சொல்லவேண்டும். குறைந்த செலவில் தயாரிக்கப்பட்ட "ஜம்பம்" நல்ல பண வசூலைக் கொடுத்ததற்குக் குமாரின் திறமையே காரணம் என்று கூறலாம். "ஜம்பம்" படக்கதை-வசனம் எழுதியவர் குமார்தான். "ஜம்ப" டைரக்ஷனிலும் அவர் பங்கெடுத்துக் கொண்டார். கதா நாயகனாகவும் அதில் நடித்திருக்கிறார்.

இரண்டு கைகளுமில்லாத ஒரு ஸ்திரீ எல்லா வேலைகளும் செய்யும் காட்சியையும், சென்னை மாகாண மந்திரிகள் சிலர் காந்திய வழியைப் பிரசாரம் செய்யும் காட்சியையும் படத்துடன் இணைத்திருக்கிறார் குமார். பாமர ஜனரஞ்சகமான இந்த அம்சங்களுடன் குமாரின் சிறந்த நடிப்பும் சேர்ந்து "ஜம்ப"த்தை நல்லதொரு பாக்ஸ் ஆபீஸ் வெற்றிப் படமாக மாற்றியிருக்கின்றன. மொத்தத்தில் "ஜம்ப"த்தினால் தான் குமார் நக்ஷத்திர வரிசையில் இடம் பெற்றிருக்கிறார் என்று கூறவேண்டும்.

தற்பொழுது குமார் "பக்த வேமனா," "சாருகதாஸர்," "ரத்னகுமார்," "கீதகாந்தி" முதலிய படங்களில் நடிக்க ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறார். இதைத்தவிர "நாட்டிய ரம்பா" என்ற படத்தையும் டைரக்ட் செய்யப் போகிறாராம்.

குமாருக்கு 1935ம் வருஷம் நாகர்கோவிலில் விவாகம் நடந்தது. விவாக விஷயத்திலும் தன்னிச்சைப்படி தான் குமார் நடந்திருக்கிறார். எவ்வளவோ இடையூறுகளைப் பொருட்படுத்

தாமல் தாம் விரும்பிய பெண்ணையே குமார் மணம் புரிந்து கொண்டிருக்கிறார். இந்தத் தம்பதிகளுக்கு முத்துஸ்வாமி என்ற ஒன்றரை வயதுக் குழந்தை ஒன்றும் இருக்கிறது.

குமாரின் இளைய சகோதரர் தகப்பனருடன் நாகர் கோவிலில் வசித்துவருகிறார். சகோதரிகள் மூவருக்கும் விவாக மாகிவிட்டது.

குமாரின் தகப்பனர் தற்போது நாகர்கோவிலில் ஆனரரி மாஜிஸ்டிரேட் வேலைபார்த்து வருகிறார்.

"கலை வளர்ச்சிக்காக ஸேவைபுரிய இன்னும் எவ்வளவோ திட்டங்கள் போட்டிருக்கிறேன். அந்தத் திட்டங்களும் காரி யத்தில் நிறைவேறுமென்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது," என்று கர்வத்துடன் கூறும் குமார் பிடிவாதமும் திடசித்த மும் கலை ஆர்வமும் கொண்ட இளைஞர். சிறந்த ஹாஸ்ய நடிகர்களில் ஒருவர். சினிமாக் கலை வளர்ச்சிக்காக அவர் வகுத்திருக்கும் திட்டங்கள் விரைவில் நிறைவேறவேண்டு மென்பதே எனது ஆசை.

# 'அப்பா' சுப்பையா பிள்ளை

ஒரு படத்தில் கதா நாயகனாக நடிக்கத் தகுதிவாய்ந்த நக்ஷத்திரம் யார் என்று தமிழ்ப்பட ரஸிகர்களைக் கேட்டால் எல்லோரும் ஏகோபித்து ஒரே நக்ஷத்திரத்தைக் குறிப்பிடுவார்கள் என்று கூற முடியாது. கதாநாயகி விஷயத்திலும் ரஸிகர்கள் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டவர்கள்தான். அதே போல வில்லன் பாத்திரத்தில் நடிக்கத் தகுதிவாய்ந்தவர் யார் என்று கேட்டால் சிலர் பாலையாவையும் சிலர் ரஞ்சனையும் சிலர் ஸ்வாமிநாதனையும் விரும்புவார்கள். ஆனால் "தாயை இழந்த கதாநாயகியின் தகப்பனாராக நடிக்கத் தகுதி வாய்ந்த நக்ஷத்திரம் யார்?" என்று கேட்டுப்பாருங்கள். "ஏன், 'அப்பா' சுப்பையா பிள்ளை இருக்கவே இருக்கிறாரே!" என்று உடனேயே பதில் வருவது நிச்சயம்.

தாயார் பாத்திரத்தை எம். ஆர். சந்தானலக்ஷ்மி நிரந்தரமாக்கிக் கொண்டு விட்டது போல 'அப்பா' சுப்பையா பிள்ளையும் தகப்பனார் பாத்திரத்தைத் தமக்கென ஸ்வீகரித்துக் கொண்டு விட்டார். எம் ஆர். சந்தானலக்ஷ்மியும் சுப்பையா பிள்ளையும் ஒருகாலத்தில் ஒரே நாடகக் கம்பெனியில் வேலை செய்தவர்கள் என்பதையும் இந்த இடத்தில் உங்கள் காதில் போட்டு வைக்கிறேன்.

1895ம் வருஷம் பிப்ரவரி மாதம் நான்காம் தேதியன்று நாகர்கோவிலில் சுப்பையா பிள்ளை பிறந்தார். அவரது தகப்பனர் அய்யப்பன் பிள்ளை நாகர்கோவிலில் ஒரு மிராசுதார்.

சுப்பையா பிள்ளை பதினறு வயது வாலிபனயிருந்த சமயத்தில் அவரது வாழ்க்கையில் ஒரு முக்கிய சம்பவம் நடந்தது. அவரது பெரிய தகப்பனர் பிதிரார்ஜிதசொத்து விஷயத்தில் அவரது தகப்பனரை மோசம் செய்துவிட்டாராம். இந்த மோசடியினல் சுப்பையா பிள்ளைக்கு வாழ்க்கை மீதே வெறுப்பு ஏற்பட்டு விட்டது. மன ஏக்கத்துடனும் விரக்தியுடனும் வீட்டைவிட்டு வெளியேறினர். அப்பொழுது அவருக்கு எந்தத் தொழிலும் தெரியாது. அந்த நாட்களில் நாகர்

கோவிலுக்கும் திருநெல்வேலிக்குமிடையே தபால்வண்டிகள் ஓடிக்கொண்டிருந்தன. தபால்வண்டி மூலம் திருநெல்வேலி வந்து சேர்ந்தார் சுப்பையா பிள்ளை.

அந்தக் காலத்தில் பிரபல நாடக நடிகர்களாக இருந்த ராஜபார்ட் கோவிந்தசாமி பிள்ளை, ஸ்ரீனிவாஸ ஆள்வார், ஜகன்னாத ஆள்வார் முதலியவர்கள் சிலோன் சென்று நாடகங்கள் ஆடும் நோக்கத்துடன் அப்பொழுது திருநெல்வேலியில் ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தார்கள். இந்த விஷயம் திருநெல்வேலி வந்து சேர்ந்த சுப்பையா பிள்ளையின் காதிற்கும் எட்டிற்று. உடனேயே அவர் ராஜபார்ட் கோவிந்தசாமி பிள்ளையை நேரில் பேட்டி கண்டு தமது துன்பங்களையெல்லாம் விவரித்தார். எல்லாவற்றையும் கேட்ட கோவிந்தசாமி பிள்ளைக்கு சுப்பையா பிள்ளை மீது இரக்கம் உண்டாகி விட்டது. "ஒரு வேலைக்காரனாக என்னுடன் வருவதாக இருந்தால் என் கோஷ்டியுடன் உன்னையும் சிலோனுக்கு அழைத்துச் செல்கிறேன்," என்றார் கோவிந்தசாமி பிள்ளை. சுப்பையா பிள்ளையும் சம்மதிக்கவே கோவிந்தசாமி பிள்ளை கோஷ்டியுடன் அவரும் சிலோனுக்குச் செல்ல சந்தர்ப்பம் கிடைத்தது.

முதலில் நாடக கோஷ்டியில் வேலைக்காரனாக சிலோன் சென்ற சுப்பையா பிள்ளை நாடகங்கள் நடிக்கப்படுவதைக் கவனித்து வரலானார். தானும் ஒரு நாடகநடிகனாக வேண்டுமென்ற ஆவல் விரைவில் அவர் மனதில் வேரூன்றியது. நாடகத்தில் தனக்கும் ஏதாவது சான்ஸ் கொடுக்கும்படி கோவிந்தசாமி பிள்ளையை வற்புறுத்தலானார்.

கோவிந்தசாமி பிள்ளை முதலில் சாக்குப் போக்கு சொல்லித் தட்டிக்கழித்துப் பார்த்தார். ஆனால் சுப்பையா பிள்ளையின் இடைவிடாத தொண தொணப்பு பொறுக்க முடியாமல் போய் விட்டது. கடைசியில் சலித்துப்போய் கூட்டத்தில் ஒருவனாக நாடகமேடையில் தோன்ற சுப்பையா பிள்ளைக்கு சந்தர்ப்பம் அளித்தார்.

வேட்டையாடும் காட்சியில் பல வேடர்களில் ஒருவராக சுப்பையா பிள்ளை முதன் முதலில் நாடகமேடையில் தோன்றினார். பிறகு சிறிது சிறிதாக நாடகக்கலையில் அனுபவம் பெற்று

கோவிந்தசாமி பிள்ளையின் கீழேயே விதூஷகன் வேஷத்தில் சுப்பையா பிள்ளை நடிக்கலானார்.

பல மாத சிரமத்திற்குப் பிறகு முதன் முதலாக சுப்பையா பிள்ளைக்கு நாடகத்தில் முக்கிய வேஷம் கிடைத்தது. கொழும்பு ஜிந்துப்பட்டி ஹாலில் நடந்த "கோவலன்" நாடகத்தில் வஞ்சிப்பத்தனாகவும் மாமாவாகவும் சுப்பையா பிள்ளை தோன்றி நடித்துப் புகழ்பெற்றார்.

சிலோனில் ஒன்றரை வருஷகாலம் இருந்து பல நாடகங்களில் பல பல வேஷங்களில், முக்கியமாக விதூஷகன் வேஷத்தில், நடித்து விட்டு சுப்பையா பிள்ளை இந்தியா திரும்பினார். இந்தியா வந்தபிறகு காருடுகொத்தான் வைத்தியநாத அய்யர், சூர்யநாராயண பாகவதர், வி. பி. ஜானகி அம்மாள் முதலிய அக்காலத்து பிரபல நாடக நடிகர்களுடன் பல நாடகங்களில் நடிக்கும் பாக்கியம் அவருக்குக் கிடைத்தது. அப்பொழுது திருநெல்வேலி கணபதி விலாஸ் தியேட்டரில் நடந்த "குலேபகாவலி" நாடகத்தில் மாமா வேஷத்தில் சுப்பையா பிள்ளை நடித்தார். நாடகத்தைப் பார்க்க வந்திருந்த ராஜபார்ட் கோவிந்தசாமி பிள்ளைக்கு சுப்பையா பிள்ளையின் நடிப்பு மிகவும் பிடித்துப் போய்விட்டது. உடனேயே மேடைமீதேறி சுப்பையா பிள்ளையின் நடிப்பைப் பாராட்டி விட்டு "ராஜ விகடன்" என்ற பட்டத்தையும் அவருக்கு வழங்கினார். அதற்குப் பிறகு பல வருஷங்களுக்கு சுப்பையா பிள்ளையை "ராஜ விகடன் பி. ஏ. சுப்பையா பிள்ளை" என்றே எல்லோரும் குறிப்பிட்டு வந்தார்கள்.

பின்னர் சுப்பையா பிள்ளை புகழ்பெற்ற கன்னையா கம்பெனியில் சேர்ந்து சிலகாலம் நடித்தார். கன்னையாவின் சகோதரர் கிருஷ்ணையாவும் ஸ்திரீபார்ட் கோமளாம்பாளும் கன்னையா கம்பெனியை விட்டு விலகி சொந்தத்தில் ஒரு நாடக கம்பெனியை ஆரம்பித்தபொழுது சுப்பையா பிள்ளையும் அந்தப் புதுக் கம்பெனியில் சேர்ந்து நடிக்கலானார். அதற்குப் பிறகு கல்லிடைக்குறிச்சி கே. பி. மொகிதீன் ஸாகிப் ஆரம்பித்த நாடகக் கம்பெனியில் சுப்பையா பிள்ளை சேர்ந்து சுமார் ஆறு வருஷகாலம் வேலை பார்த்தார். இந்தக் கம்பெனி நிர்வாகவேலையையும் கவனித்துக்கொண்டு விதூஷகனாகவும் நடித்து வந்தார். கே. பி. சுந்தராம்பாளும் டி. பி. ராஜலக்ஷ்மி

யும் இந்தக் கம்பெனியில்தான் முதன் முதலில் பாலபார்ட் நடிகைகளாகச் சேர்ந்தார்கள் என்பதை இங்கே குறிப்பிட வேண்டும்.

அதற்குப் பிறகு சுப்பையா பிள்ளை கோல்டன் சாரதாம்பாள் கம்பெனியில் நடிகராகச் சேர்ந்தார். என். எஸ். கிருஷ்ணன், எம். வி. மணி, புளிமூட்டை ராமஸ்வாமி அய்யர் முதலிய நடிகர்களும் சுப்பையா பிள்ளையுடன் இதே கம்பெனியில் வேலை பார்த்திருக்கிறார்கள்.

1930-ம் வருஷம் நாடெங்கும் கள்ளுக்கடை, சாராயக் கடை மறியல் நடந்ததே, ஞாபகமிருக்கிறதா? அந்த சமயத்தில் எம். ஆர். சந்தானலக்ஷ்மி, சுப்பையா பிள்ளை முதலிய நாடக நடிக நடிகையர்கள் திருப்பரங்குன்றத்தில் சாராயக் கடை மறியல் செய்ய ஆரம்பித்தார்கள். அப்பொழுது மதுரை ஸ்ரீ. ஏ. வைத்தியநாத அய்யர் தலையிட்டு நாடகங்கள் நடத்தி காங்கிரசிற்குப் பண உதவி செய்யும்படி இவர்களைக் கேட்டுக் கொண்டாராம். அதன்படி இவர்கள் மறியலை நிறுத்திவிட்டு காங்கிரஸ் நிதிக்காக உதவி நாடகங்கள் நடத்த ஆரம்பித்தனர். இவர்களது 'தமிழ்நாடு நடிகர் சங்க'த்திற்கு ராஜாஜி, காலம் சென்ற ஸ்ரீ. ஸத்தியமூர்த்தி முதலிய பிரபல காங்கிரஸ் தலைவர்களும் விஜயம் செய்திருக்கிறார்கள். இந்தச் சங்கத்தில் சுப்பையா பிள்ளை பல வருஷங்கள் கமிட்டி அங்கத்தினராகவும் காரியதரிசியாகவும் ஓர் முறை தலைவராகவும் இருந்து சேவை செய்திருக்கிறார்.

சுப்பையா பிள்ளைக்கு வேதாந்தப் பித்தும் அடிக்கடி பிடித்துவிடும். 1917-ம் வருஷம் இந்தமாதிரி அவருக்குப் 'பைத்தியம்' பிடித்து விட்டது. சுமார் ஆறுமாதகாலம் க்ஷேத்திராடனம் செய்தார். காசிமுதல் கன்னியாகுமரிவரை பல பல புண்ய ஸ்தலங்களுக்கு அப்பொழுது விஜயம் செய்தார்.

அதேபோல 1930-ம் வருஷ வாக்கில் சுப்பையா பிள்ளைக்குப் பழையபடி வாழ்க்கையில் விரக்தி ஏற்பட்டுவிட்டது. மறுபடி புண்யஸ்தல யாத்திரையைத் தொடங்குவது என்று தீர்மானித்தார். ஆனால் தீர்த்தயாத்திரை கிளம்புவதற்கு முன் தனது பழைய நண்பர் என். எஸ். கிருஷ்ணனைக் கண்டு விடை

பெற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. என். எஸ். கிருஷ்ணன் அப்பொழுது கோயமுத்தூரில் "நவீன விக்ரமாதித்தன்" படப்பிடிப்பில் ஈடுபட்டிருந்தார். கோவை வந்து சேர்ந்த சுப்பையா பிள்ளை கிருஷ்ணனைச் சந்தித்துச் தமது எண்ணத்தைச் வெளியிட்டார். அவ்வளவு தான், கிருஷ்ணனுக்கு ஆத்திரம் வந்துவிட்டது. "என்ன ஐயா ஸ்தல யாத்திரை வேண்டிக் கிடக்கிறது? பேசாமல் காளி கோவில் பூஜாரி வேஷத்தைப் போட்டுக் கொள்ளும்," என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்! சுப்பையா பிள்ளையால் மறுக்க முடியவில்லை. "நவீன விக்ரமாதித்த"னில் காளி கோவில் பூஜாரியாக நடித்துத் தீர்த்தார்!

இப்படியாக சுப்பையா பிள்ளை முதல் முதலாகப் படத்தில் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர் என். எஸ். கிருஷ்ணன் தான். அவர் மட்டும் அப்பொழுது தடுத்தாட்கொண்டிரா விட்டால் இப்பொழுது சுப்பையா பிள்ளை எங்கு தீர்த்த யாத்திரை செய்து கொண்டிருப்பாரோ, யார் கண்டது?

அதற்கடுத்த படத்திலிருந்தே தகப்பனார் வேஷம் 'அப்பா' சுப்பையா பிள்ளையைப் பிடித்துக் கொண்டுவிட்டது. "இரு நண்பர்க"ளிலும் "பூலோக ரம்பை"யிலும் டி. ஏ. மதுரத்தின் தகப்பனாராக சுப்பையா பிள்ளை நடித்தார். பின்னர் "குமாஸ்தாவின் பெண்"ணிலும் தகப்பனார் வேஷம்தான். அதைத் தொடர்ந்து "அலிபாபா," "ஆராய்ச்சிமணி," "கிருஷ்ண பிடாரன்," "ஆர்யமாலா" ஆகிய படங்களில் சுப்பையா பிள்ளை நடித்தார்.

"ஆர்யமாலா"வில் என். எஸ். கிருஷ்ணன் 'மோடி'வேலை செய்யும் கட்டத்தில் அவருக்குப் போட்டியாக முன் குடுமி யுடன் ஒரு மலையாள மாந்திரீகர் தோன்றுகிறாரே, ஞாபக மிருக்கிறதா? அந்த மலையாள பகவதி வேறு யாருமில்லை; ஸாக்ஷாத் சுப்பையா பிள்ளைதான்.

சுப்பையா பிள்ளை ஜெமினி நடிகராவதற்குக் காரணமா யிருந்தவரும் என். எஸ். கிருஷ்ணன்தான். "மங்கம்மா சபதம்" தயாரிக்கப்பட்டபொழுது மங்கம்மாவின் தகப்பனார் வேஷத் திற்கு யாரைப் பொறுக்குவது என்ற பிரச்னை எழுந்தது. கடைசியில் என். எஸ். கிருஷ்ணனின் சிபாரிசின்பேரில்

சுப்பையா பிள்ளையை அந்த பாகத்திற்கு ஸ்ரீ. வாஸன் அமர்த்தினாராம்.

சுப்பையா பிள்ளை நடித்த முதல் ஜெமினிப் படம் "மங்கம்மா சபதம்". அதில் மங்கம்மாவின் தகப்பனாராகத் தோன்றி நடித்த சுப்பையா பிள்ளையின் உணர்ச்சி ததும்பும் நடிப்பை ரஸிகர்கள் ஒரு முகமாகப் புகழ்ந்தார்கள்.

அதன் பின்னர் ஜெமினியின் "கண்ணம்மா—என் காதலி"யில் நாட்டு வைத்தியராகவும், "மிஸ் மாலினி"யில் புஷ்பவல்லியின் தந்தையாகவும் சுப்பையாபிள்ளை நடித்துப் புகழ்பெற்றார்.

பிறகு ஜெமினியின் மகத்தான ஸ்ருஷ்டியாகிய "சந்திரலேகா"வில் சந்திரலேகாவின் தந்தையாக சுப்பையா பிள்ளை நடித்திருக்கிறார். ஜனரஞ்சகமான பல அம்சங்கள் நிறைந்த 'சந்திரலேகா'வைப் பார்த்துவிட்டு வெளியே வரும் ரஸிகர்களின் அகத்திரையில் சுப்பையா பிள்ளையின் வயோதிக முகமும் அடிக்கடி தோன்றத்தான் செய்யும். அவ்வளவு பாவபூர்ணமாக, பாத்திரத்தின் தன்மையை அறிந்து சுப்பையா பிள்ளை நடித்திருக்கிறார்.

இப்பொழுது தயாரிப்பிலிருக்கும் ஜெமினி 'கோராகும்ப'ரிலும் சுப்பையா பிள்ளைக்கு தகப்பனார் வேஷம்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஜெமினி 'ஞான சவுந்தரி'யில் சந்நியாசியாகவும் சுப்பையா பிள்ளை நடித்திருக்கிறார்.

1920-ம் வருஷத்தில் சுப்பையா பிள்ளை தமது மாமன் புதல்வியை மணம்செய்து கொண்டார். நோய்வாய்ப்பட்டிருந்த அந்த மனைவி இல்லற வாழ்க்கைக்குத் தகுதி அற்றவள் என்று டாக்டர்கள் கூறிவிட்டனர். ஆகவே சுப்பையா பிள்ளை திருவனந்தபுரத்தைச் சேர்ந்த வனஜாக்ஷி என்பவரை விவாகம் செய்து கொண்டார். வனஜாக்ஷியும் சில நாடகங்களிலும் படங்களிலும் நடித்திருக்கிறார். சுப்பையா பிள்ளைக்கு வனஜாக்ஷி மூலம் ஒரு புதல்வி இருக்கிறாள். அந்தப் புதல்விக்கும் விவாகமாகி விட்டது. சுப்பையா பிள்ளைக்குத் தற்சமயம் பெண் வயிற்றுப் பேரன் ஒருவனும் பேத்தி ஒருவளும் இருக்கிறார்கள்.

சுப்பையா பிள்ளையின் முதல் மனைவி இன்னமும் நோயில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார். இரண்டாவது மனைவி

வனஜாக்ஷி மூன்று வருஷங்களுக்கு முன்பே பரலோகம் சேர்ந்துவிட்டாள். அது முதல் சுப்பையா பிள்ளை சந்நியாசி போலவே தமது வாழ்க்கையை நடத்திவருகிறார்.

சுப்பையா பிள்ளையின் தாயாரும், சகோதரியும், சகோதரியின் குழந்தைகள் ஆறுபேறும் நாகர் கோவிலில் இருக்கின்றனர். அவர்கள் எல்லோரையும் தமது சம்பாத்தியத்திலிருந்து சுப்பையா பிள்ளை காப்பாற்றி வருகிறார். புதல்வியும், பேரனும் பேத்தியும் தற்சமயம் அவருடனேயே வசித்து வருகின்றனர்.

செய்ந்நன்றி மறப்பதென்று சுப்பையா பிள்ளையின் அகராதியில் காண முடியாத விஷயம். என். எஸ். கிருஷ்ணன் தனக்குச் செய்திருக்கும் உதவிகளைச் சொல்லிச் சொல்லி இன்றைக்கும் அவர் கண்ணீர் வடிக்கிறார். "என். எஸ். கிருஷ்ணன் உதவியால் தான் தமிழ்ப்பட உலகில் நுழைந்தேன். அவரது துணையால்தான் ஜெமினியிலும் நடிகனகச் சேர்ந்தேன். இன்று நான் சாப்பிடும் சாப்பாடு என். எஸ். கே. யின் சாப்பாடு. நாளைக்கும் எனக்குத் துன்பம் வந்தால் அவரிடம்தான் செல்வேன் உதவியை நாடி. அவர் உதவி செய்வார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு," என்று உணர்ச்சியுடன் சுப்பையா பிள்ளை கூறுவதைக் கேட்கும்போது எனக்கே கண்களில் கண்ணீர் மல்கி விட்டது.

சுப்பையா பிள்ளை சிறந்த காந்தி பக்தர். ஷூட்டிங் இல்லாத நாட்களில் நூற்றுக்கொண்டே இருப்பார். கதர் தவிர வேறு எந்த ஆடையையும் அவர் கட்டுவது கிடையாது.

"தனது கடமையைச் சரிவரச் திறமையுடன் செய்வதன் மூலம் மனிதன் பூரணப் பொலிவை அடைகிறான்," என்று கீதையில் ஒரு வாக்கியம் இருக்கிறது. சாதாரண வேஷங்களில் திறமையுடன் நடிப்பதன் மூலம் நக்ஷத்திரப் பதவி பெற்றிருக்கும் 'அப்பா' சுப்பையா பிள்ளையின் வாழ்க்கை அதற்கு ஒரு சிறந்த உதாரணம்.

# பி. ஆர். பந்துலு

எங்கேயோ ஒரு குக்கிராமத்தில் ஆரம்பப் பாடசாலை ஆசிரியராகத் தமது வாழ்நாட்களைக் கழித்துக் கொண்டிருக்க வேண்டிய ஒரு நபர் இன்று கன்னடம், தெலுங்கு, தமிழ் ஆகிய மூன்று பாஷைப் பேசும் படங்களிலும் நடித்து சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கிறார் என்று சொன்னால் முதலில் நீங்கள் நம்பமாட்டீர்கள். அதிலும் பிரசித்தி பெற்ற குணவிசேஷ நடிகர் பி. ஆர். பந்துலுதான் அந்த ஆரம்ப ஆசிரியர் என்றும் சொல்லிவிட்டாலோ ஆச்சரியத்தினால் மூச்சுவிடக்கூட மறந்துவிடுவீர்கள்! ஆனால் பி. ஆர். பந்துலு தமது வாழ்நாளில் சுமார் இரண்டு வருஷகாலம் ஆரம்ப ஆசிரியராக இருந்ததென்னவோ உண்மைதான்!

சித்தூர் ஜில்லாவில் பஞ்சு மெத்தைகளுக்குப் பெயர் போன குப்பம் என்ற ஊரைச் சேர்ந்தவர் பந்துலு. அவரது தகப்பனார் குப்பம் ஜமீன்தாரிடம் காரியஸ்தராக வேலை பார்த்து வந்தார். கொஞ்சம் ஐவேஜும் இருந்தது. தமது மூன்று குமாரர்களையும் நன்றாகப் படிக்க வைத்து, அவர்கள் நல்ல உத்தியோகம் செய்வதைக் கண்ணால் பார்க்க வேண்டுமென்பது அவரது அவா. ஆகையால் குடும்பத்துடன் சென்னையில் குடியேறினார் பந்துலுவின் தகப்பனார். அப்பொழுது பந்துலு இரண்டு வயதுக் குழந்தையாயிருந்தார். இந்த சம்பவம் நடந்து முப்பது வருஷங்களாகின்றன.

சென்னைக்கு வந்த பிறகு குடும்பச் செலவும் பெருக ஆரம்பித்தது. எத்தனைதான் பணமிருந்தாலும் சம்பாதிக்கா விட்டால் எத்தனை நாளுக்கு வரும்? பந்துலுவின் தகப்பனார் கையிலிருந்த பணம் கரைந்துகொண்டே வந்தது.

பந்துலு முத்தியாலுப்பேட்டை ஹைஸ்கூலில் சேர்ந்து படித்துவந்தார். ஒவ்வொரு வகுப்பிலும் இரண்டு, மூன்று வருஷங்களாவது தேக்கம்போட்டு விட்டுத்தான் அடுத்த வகுப்புக்குச் செல்வார். அப்பொழுதிலிருந்தே நாடகங்களிலும், களியாட்டத்திலும் அவர் கவனம் சென்றுவிட்டதால் படிப்பு விஷயத்தில் அவர் சிரத்தை காட்டவில்லை. இருந்த

போதிலும் ஒரு வழியாக எஸ். எஸ். எல். வி.யை எட்டிப் பிடித்துவிட்டார் பந்துலு.

பந்துலுவின் பள்ளிக்கூடத்தில் நடந்த பல நாடகங்களில் பந்துலுவும் பங்கெடுத்துக் கொண்டு பரிசுகள் பெற்றார். பள்ளிக்கூடத்தில் படித்து வந்தபோதே சுகுண விலாச சபா நாடகங்களிலும் நடித்துவந்தார். ஆந்திர நாடக சபாவிலும் நடித்து வந்திருக்கிறார். பிரபல தெலுங்கு டைரக்டரான பி. என். ரெட்டியும் ஆந்திர நாடக சபாவில் நடித்துவந்த இவரது சக நடிகர்களில் ஒருவர்.

பந்துலு ஸ்கூல்பைனல் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கையில் அவரது தகப்பனார் இறந்துவிட்டார். அத்துடன் பந்துலுவின் பள்ளிக்கூடப் படிப்பும் நின்றுவிட்டது.

பள்ளிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தவுடன் பந்துலு என்ன செய்வதென்று தீவிரமாக யோசிக்கலானார். குடும்பத்திற்கு பாரமாக இருப்பதில் பிரியப்படாமல் ஏதாவது உத்தியோகம் செய்து பணம் சம்பாதிக்க வழிதேட வேண்டாமா? இதற்காகத் தானே தகப்பனார் சென்னைக்கு வந்து, கையிலுள்ள பணத்தை யெல்லாம் செலவழித்து பையன்களைப் படிக்க வைத்தது?

ஆனால் பந்துலுவுக்கு உத்தியோகத்தின் மீது நாட்டம் செல்லவில்லை. சுமார் இரண்டு மூன்று வருஷங்கள் இங்குமங்கும் சுற்றிக் கொண்டிருந்தார். கடைசியில் தமது சொந்த கிராமத்திற்கே சென்று அங்கு ஒரு ஆரம்பப் பாடசாலையில் ஆரம்ப ஆசிரியராகப் பதவி ஏற்றார்.

சுமார் இரண்டு வருஷங்கள் பந்துலு ஆரம்ப ஆசிரியராக இருந்தார். ஆனால் விரைவில் அந்த உத்தியோகத்தின் மீது அவருக்குச் சலிப்பு ஏற்பட்டுவிட்டது. கலை ஆர்வம் மிகுந்த தமது உள்ளத்தைப் பந்துலுவால் கட்டுப்படுத்த முடியவில்லை. ஓசைப்படாமல் வாத்தியார் வேலைக்குத் தலை முழுகிவிட்டுப் பங்களூர் சென்றார் பந்துலு!

தான் ஒரு நாடக நடிகராகப் புகழ்பெற வேண்டும் என்பதுதான் அவரது விலக்கமுடியாத ஆவலா யிருந்தது. பங்களூர் சென்று வேறு நல்ல உத்தியோகம் தேடுவதாகச்

சொல்லிவிட்டுப் போன பந்துலு நேராகக் குப்பி வீரண்ணா வின் நாடகக் கம்பெனிக்குச் சென்று, தம்மை ஒரு நடிகனாக சேர்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். ஆனால் நடிகனாவதற்கு லாயக்கில்லை என்று பதில் வரவே அங்கிருந்து வெளியேறினார்.

கன்னட தேசத்தில் மிகவும் பிரக்யாதியுடன் நாடகமாடி வந்த மகமது பீர் என்பவரைத் தெரியாதவர் இருக்க முடியாது. அவர் ஒரு சிறந்த நடிகராக விளங்கியதோடு இல்லாமல் பல நாடகங்களையும் எழுதித் தயாரித்து வந்தார். அந்த மகமது பீர்தான் முதன்முதலாகப் பந்துலுவுக்கு ஆதரவு அளித்தவர். சுமார் மூன்று வருஷங்கள் அவரது கம்பெனியில் நடிகராக இருந்து பல வேஷங்களில் தோன்றினார் பந்துலு. ஷாஜஹான் நாடகம் இக்கம்பெனியாரின் வெற்றிகரமான நாடகமாக இருந்துவந்தது.

அப்பொழுது பீர் நாடகக் கம்பெனியில் இருந்து வந்த ஸிம்ஹா என்பவர் அப்பொழுதுதான் "சம்சார நௌகா" கதையை எழுதி நாடகமாக அரங்கேற்றினார். தமிழ் "சம்சார நௌகா" படத்தை டைரக்ட் செய்திருப்பவரும் அதே ஸிம்ஹாதான் என்பதை இங்கே குறிப்பிடவேண்டும்.

பொது மக்கள் "சம்சார நௌகா" நாடகத்துக்கு நல்ல ஆதரவு கொடுத்துவந்தனர். முன்பு லாயக்கில்லை என்று தள்ளி விடப்பட்ட இடத்திலிருந்தே பந்துலுவுக்கு அழைப்பு வந்தது. குப்பி நாடகக் கம்பெனியில் சேர்ந்தார் பந்துலு. சுமார் இரண்டு வருஷங்கள் வரை அங்கு இருந்துவிட்டு தனது சொந்தக் கம்பெனியை ஆரம்பம் செய்தார். பந்துலு வுடன் சுமார் ஒரு டஜன் நடிகர்கள் வெளியேறினார்கள். "கலா சேவா மண்டலி" என்ற பெயருடன் ஸ்தாபிக்கப்பட்ட இந்தக் கம்பெனியில் பலத்த உற்சாகம் காணப்பட்டது. பங்களூரில் "கலா சேவா மண்டலி"யார் நாடகமாட ஆரம்பித்தனர். "சம்சார நௌகா" தொடர்ச்சியாக 140 நாட்கள் நடத்தப்பட்டது.

பங்களூரில் கிடைத்த வெற்றியுடன் திக்விஜயம் செய்யக் கிளம்பினார் பந்துலு. மைசூர், தும்கூர் முதலிய பல இடங்களில் முகாம் போட்டுவிட்டு கடைசியாகச் சென்னை வந்து

சேர்ந்தார். சௌந்தர்ய மஹாலில் "சம்சார நௌகா" நாடகம் ஆரம்பமாயிற்று. சென்னை மகா ஜனங்களும் இந் நாடகத்துக்கு அமோக ஆதரவைத் தந்தனர். இதைப் பார்த்த தேவி பில்ம்ஸார் நாடக நடிகர்களைக் கொண்டே இந்த நாடகத்தைக் கன்னடத்தில் படமாகத் தயாரிக்க ஏற்பாடு செய்தனர். எம். வி. ராஜம்மா, பி. ஆர். பந்துலு முதலியோர் நடித்த இப்படம் கன்னட தேசத்தில் மட்டுமல்லாது தமிழ் நாட்டிலும் அமோக வெற்றியைப் பெற்றது. இதுதான் பந்துலு நடித்த முதல் பேசும் படம்.

இதே கதையை இப்பொழுது தமிழில் திரைப்படமாக ஸ்டார் கம்பைன்ஸார் பிரகதி ஸ்டுடியோவின் கூட்டுறவில் தயாரித்து முடித்திருக்கின்றனர்.

தமிழ் 'சம்சார நௌகா'வில் பந்துலு கதா நாயகன் சுந்தரமாக நடித்திருக்கிறார். சம்சார சாகரத்தி லிறங்கி, துக்க சாகரத்தில் மூழ்கியிருந்த கதாநாயகன் சுந்தரத்தைப் போலவே பல கஷ்டங்களைத் தனது சொந்த வாழ்க்கையிலேயே அனுபவித்துவிட்டார் பந்துலு.

"இப்பொழுதுதான் கொஞ்சகாலமாக அதிர்ஷ்ட தேவதை கண்ணைத் திறந்திருக்கிறாள்", என்று அவர் கூறும் போது பழைய ஞாபகங்கள் இன்னும் அவரது மனதில் தோன்றிக்கொண்டே இருக்கின்றன என்பது தெரியும். பல வருஷங்களாகப் படங்களில் தோன்றி வந்தும் அப்படங்களெல்லாம் தோல்விப் படங்களாகப் போகவே நல்ல பெயரெடுக்க சந்தர்ப்பம் கிடைக்காமல் மனம் வருந்தியிருக்கிறார் பந்துலு. நாடக மேடையில் நல்ல பெயருடன் விளங்கியும் அது அவரது பொருளாதார நிலையை உயர்த்தவில்லை. பல படங்களில் தோன்றியும் அவரது துரதிருஷ்டம் அவரைப் பின் தொடர்ந்து வந்தது. சமீப வருஷங்கள் வரை அவரது திறமையையும், கலை ஆர்வத்தையும் பட முதலாளிகள் உணரவில்லை என்றே தோன்றுகிறது. இப்பொழுதோ அவர் நான்கு படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறார். 'சம்சார நௌகா' தயாரிப்பிலும் விசேஷ சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார்.

கன்னட 'சம்சார நௌகா'வில் நடித்த பின்னர் பந்துலு

வுக்கு "ராஜ பக்தி" தமிழ்ப் படத்தில் நடிக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. பி. எஸ். ரத்னபாய், சரஸ்வதிபாய் நடித்தது இப்படம் என்பதை வாசகர்கள் மறந்திருக்க மாட்டார்கள். பின்பு கோயமுத்தூர் பிரிமியர் சினிடோன் தயாரித்த "திலோத்தமா"விலும், எம். பி. பி. வலி.யின் "தானசூர கர்ணு"விலும் நடித்தார். "கங்காவதா"ரில் சகடச் சக்ரவர்த்தி யாகத் தோன்றினர்.

நான்கு தமிழ்ப் படங்களுக்குப் பிறகு "பக்திமாலா" என்ற தெலுங்குப் படத்தில் பந்துலு நடித்தார். இன்று பிரபல நக்ஷத்திர நடிகராக விளங்கும் பானுமதியும், பந்துலுவும் பிரதம பாகத்தில் தோன்றிய படம் இது.

"பக்திமாலா"வுக்குப் பிற்பாடு ஒய். வி. ராவ் தமது "சத்யபாமா"விலும், "தாசில்தா"ரிலும் பந்துலுவுக்கு இடம் கொடுத்தார். ஆனால் இரண்டிலும் மிகவும் சிறிய பாகங்கள்.

இவைகளை முடித்த பின்னர் பந்துலுவுக்கு வாழ்க்கையில் வெறுப்பும், சினிமாத் தொழிலில் அவநம்பிக்கையும் ஏற்பட ஆரம்பித்தது. மறுபடியும் தனது நாடகக் கம்பெனியைப் புதுப்பித்து அதில் கவனம் செலுத்த ஆரம்பித்தார். சென்னை சௌந்தர்ய மஹால் அவரது பழைய 'ஆகி'வந்த இடமல்லவா? அதே இடத்தில் தனது பெயர்போன "சம்சார நௌகா"வைத் தமிழில் ஆரம்பித்தார். கொஞ்சகாலம் சென்னையில் இருந்துவிட்டு தஞ்சாவூர், காரைக்குடி முதலான இடங்களுக்குச் சென்று நாடகங்கள் நடத்தினர். "சம்சார நௌகா"வைத் தவிர "வரதக்ஷிணை" என்ற நாடகமும் பெயர் பெற்று நல்ல ஆதரவுடன் விளங்கியது.

இச்சமயத்தில் ஒய். வி. ராவ் மறுபடியும் பந்துலுவுக்கு அழைப்புவிடவே சினிமாத் தொழில் மறுபடியும் பந்துலுவின் கவனத்தைக் கவர்ந்தது. "லவங்கி"யில் ஷாஜஹானை மிகவும் கம்பீரமாகத் தோற்றமளித்தார் பந்துலு. அபாரமான வேஷப் பொருத்தம் இம்மாதிரிப் பாத்திரங்களுக்கு பந்துலு மிகவும் ஏற்றவர் என்பதை நிரூபித்தது.

'லவங்கி'க்கு அடுத்தபடி பந்துலு "விஜயலக்ஷ்மி"யில் நடித்தார். 'விஜயலக்ஷ்மி' கதை ஏற்கெனவே அவர் நாடகமாக நடித்திருந்த 'வரதக்ஷிணை' கதையைத் தழுவியது. பணத்

தாசை பிடித்து பணத்துக்காக மகனையும், மருமகளையும் துன் பத்திலாழ்த்திய கிழவனின் கதை இது. கிழவனது வேஷம் பந்துலுவுக்குத் தத்ரூபமாகப் பொருந்தி யிருந்தது. "கார்டு எழுதியிருக்கானு, கவர் எழுதி யிருக்கானு?" என்று அவர் கேட்கும்போது காசின்பேரில் உள்ள ஆசையை அவர் தத் ரூபமாக எடுத்துக் காட்டினர். பின்பு கிழவன் மனம் மாறும் போது பந்துலுவின் நடிப்பு உச்சஸ்தானத்தை அடைந்தது. 'விஜய லக்ஷ்மி' பெரிய வெற்றி பெறவில்லையானுலும் அதில் நடித்த பந்துலுவுக்கு அப்படம் பெரிய வெற்றி என்றே சொல்ல வேண்டும். பிரகதியும் ஸ்டார் கம்பைன்சாரும் கூட்டாகத் தயாரித்த இப்படம் முடிவடைந்தவுடன் இன் ெனாரு கூட்டுத் தயாரிப்பு ஒப்பந்தம் முடிவடைந்தது. அது தான் இப்பொழுது தமிழ் "சம்சார நௌகா"வாக உருவாகி வெளி வந்திருக்கிறது.

"விஜய லக்ஷ்மி"க்குப் பின்னர் பந்துலு "நாம் இருவ" ரில் சுகுமாரின் அண்ணனாக வருகிறார். அவரது நடிப்பும், அவர் உணர்ச்சியுடன் கூறும் வசனங்களும் அப்படத்தின் முக்கிய அம்சங்களில் ஒன்று. அவர் பேசிமுடிக்கும்போதெல் லாம் ஜனங்கள் கை தட்டி ஆரவாரிப்பதைப் பார்க்கலாம்.

இப்போது ராகிணி பிக்சர்ஸாரின் 'பக்த ஜன'வில் பங் தோஜியாகவும், ராம பால கான சபையார் தயாரித்துவரும் "குடும்ப வாழ்க்கை"யில் கதா நாயகனாகவும், பிரகதியாரின் சார்பில் எல்லிஸ் ஆர். டங்கன் தயாரித்து வரும் சமூகப் படத்தில் ஒரு முக்கிய பாகத்திலும் பந்துலு நடித்துவருகிறார்.

பந்துலுவின் தாய் பாஷை தெலுங்கு. ஆயினும் குப்பம் கன்னட எல்லையில் இருப்பதால் அவருக்கு கன்னடமும் தெரிந்திருந்தது. பள்ளிக்கூடத்தில் படித்ததோ தமிழ். ஆகவே, அவருக்கு தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மூன்று பாஷைகளிலும் நல்ல தேர்ச்சி உண்டு. இவரைப் போல் மூன்று பாஷைகளிலும் நன்ருகப் பேசி நடிக்கும் திறமையுடையவர்கள் வெகு சிலர்தான் இருக்கின்றனர்.

சுமார் ஐந்தரை அடி உயரமும், மாநிற மேனியும் வாய்ந்த பந்துலு 1911-ம் வருஷம் ஜூலை மாதம் 26-ம் தேதி பிறந்தார். பந்துலுவுக்கு பனிரெண்டு வருஷங்களுக்கு

முன்பே விவாகமாகிவிட்டது. ஆனால் புத்திரபாக்கியம் இது வரை அவருக்கு கிட்டவில்லை. அவரது இரு சகோதரர்களில் ஒருவர் கல்கத்தாவிலும், இன்னொருவர் சென்னையிலும் உத்தியோகத்திலிருக்கின்றனர்.

பந்துலு நல்ல குணங்கள் படைத்தவர். சிநேகிதர்கள் என்றால் அவருக்கு உயிர். கஷ்டப்பட்டு தன் சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்தவராதலின் பிறருடைய சுக துக்கங்களை உடனே உணர்ந்து கொள்ளும் சுபாவமுடையவர். தன் வேலையில் கண்ணும் கருத்துமாயிருந்து காரியத்தைச் சாதிப்பதில் கவனம் செலுத்துவார்.

ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கை வாழவே அவர் விரும்புகிறார். தன்னால் கூடுமானவரை பிறருக்கு உதவியாக இருக்க வேண்டும் என்பதொன்றையே அவர் வாழ்க்கை லட்சியமாகக் கொண்டிருக்கிறார்.

தமிழ்ப் படங்களில் நடித்துவரும் பல குணவிசேஷ நடிகர்களில் பந்துலு ஒரு உயர்ந்த ஸ்தானம் வகிக்கிறார்.

—

